தாசில்தார் நாடகம்

சைதாபுரம் காசிவிசுவநாத முதலியார்

1868

உ

கடவுள் துணை.

# தாசில்தார் நாடகம்.

கடவுள் துதி.

## வெண்பா.

ஆக்கியளித்திட் டழி[illegible]விளையாட்டில் ... ... *
நீக்கமிலாத்தேவ னிறையருளால் - ஊக்கமுடன் ... *
தாசில்தார் நாடகத்தைச் சாற்றுவே ஞனிலத்தோர் ... *
ஏசிலா நீதிபெற வென்று ... ... ... *

## அவையடக்கம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தாய்தனது மாபிரிய மான சிசுவானது ... *
தவழ்ந்து விளை யாடுகையிலே ... *
வாயில்வரு தேமழலை காதில்நுழை போதுமன ... *
மானமகிழ் வுறு திகழ்வளோ ... ... *
சேயனைய பாவலர்கள் பேதையெனு நானுள[illegible] *
சீர்சுவை யிலாத கவியைக் ... ... *
காய்வதொரு காலுமிலை ஆரவருளேபுரிவர் ... *
காசினியின் மீதினி லரோ ... ... *

மங்களம்-தரு-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபுவனனுக்கு ஜெயமங்களம் - சச்சி
தானந்தரூபனுக்குச்சுபமங்களம்

அநுபல்லவி.

சோதிமகேசனுக்குத்...... அப்பிரகாசனுக்கு
நீதிவிலாசனுக்கு... ... நீக்குலாசனுக்கு

[சரணங்கள்.]

சுந்தரர்தூதனுக்கு............நாதனுக்குமங்களம்
துன்னுங்கபாலனுக்குச்..... சீலனுக்குமங்களம்
சந்திரசேகரற்குத் ............... தருகருணாகரற்கு
விந்தைப்பிரபாகற்கு ..... மிகுஜெயசாகரற்கு (ஆதி)

அதிபரிசுத்தனுக்குக்........கீர்த்தனுக்குமங்களம்
அரனுக்குப்பரனுக்கு .. ...வரனுக்குமங்களம்
விதிபுகழ்யோகனுக்கு... விளங்குமைபாகனுக்குத்
திதிபெறும்ஏகனுக்குத்- துலங்கும்பினாகனுக்கு (ஆதி)

அத்துவிதவஸ்துக்குச் ......... சித்துக்குமங்களம்
அகநிலைபொருளுக்கு .... அருளுக்குமங்களம்
நித்யபூரணனுக்கு .......... நிகிலகாரணனுக்குச்
சத்யவாரணனுக்குச்... சமயோத்தாரணனுக்கு (ஆதி)

---

தோடையம்-இராகம்-நாட்டை.

ஜம்பைதாளம்.

(க) இந்தநெடியதேசத்திலுற ... ... *
மெளியகுடிகள்பொருள்தின்னத் ... *
தந்திரமறியுந்தாசீல் ... ... ... *
தார்நாடகஞ்சொலவே - ஆ - ஆ ... *
சந்திரசேகரனாருளும் ... ... *
சுந்தரமாமகனெனப்பகரும் ... *
தந்திமுகன்தாமரைநிகராம் ... ... *
சரணமதுதுணையே - ஜெய - ஜெய ... *

(உ) தண்டெனஜமாபந்தியெனச் ... ... *
சரபராவுக்கெனப்பொருள்பறிக்கச் *
சண்டப்பிரசண்டனெனுந்தாசீல் ... *
தார்நாடகஞ்சொலவே - ஆ - ஆ ... *
அண்டபகிரண்டங்களையும் .. ... *
அளித்தவயனார்மனைவியெனும் ... ... *
வண்டுறைவெண்டாமரையாள்தன் ... *
வளர்பதங்கள்துணையே - ஜெய - ஜெய ... *

(௩) திருடர்முருடர்களாதியராம் ... *
தீயர்கள்மகிழ்வுறச்செய்தவர்கள் ... *
தருமிகுநிதிபடைத்திடுந்தாசில் ... *
தார்நாடகஞ்சொலவே - ஆ - ஆ ... *
பிரணவப்பொருளென அருமறைகள் ... *
பேசியநித்யநிராமயமாம் ... *
அரனதிருவடியாகியநல் ... ... *
அம்புயங்கள்துணையே - ஜெய - ஜெய *

(௪) கோவில்வருமானங்களையே ... *
கொள்ளையடிக்குந்தருமகருத் ... *
தாவின்மனதுக்கிசைதாசில் ... *
தார்நாடகஞ்சொலவே - ஆ - ஆ ... *
தேவர்கள்தினமடிபரவும் ... *
தேவனும்வாமதேவன்மகிழ் ... *
தேவிதன்செந்தாமரைபோன்ற ... *
திருவடிகள்துணையே - ஜெய - ஜெய *

(௫) மட்டில்லகால்மரணமதில் .. ... *
மருட்டியுருட்டிக்குடிகள்பணம் ... *
தட்டிப்பறித்துக்கொளுந்தாசில் .. ... *
தார்நாடகஞ்சொலவே - ஆ - ஆ ... *
அஷ்டாக்ஷரவடிவாகியகி ... ... *
லாண்டசராசரமும்பளிக்கும் ... *
விஷ்ணுசரோருகமலர்க்கிணையாம் ... *
விமலபாதந்துணையே - ஜெய - ஜெய ... *

(௬) குறவர்மறவர்மேதரவர்களும் ... *
கூலிபெறும்மேல்கூடைகட்டித் ... *
தரமனமதுமகிழ்ந்திடுந்தாசில் ... *
தார்நாடகஞ்சொலவே - ஆ - ஆ ... *
ஒருமொழியால்நானெனுஞ்சாக்ஷி ... *
யொன்றிலயிக்கியமெனக்காட்டும் ... *
குருசிரோமணிபுண்டரீகமெனும் ... *
கோலபாதந்துணையே - ஜெய - ஜெய *

பொதுவிருத்தம்.

விந்தையாந்தாசில்தாரர்வியன்பெறுநாடகத்தில் ... *
சந்ததம்ஆசியங்கள்சபையெலாங்களிக்கப்பேசக் ... *
தந்தவுள்ளடைகளைத்தின்றுகனத்தவன்னுன்சால்போன்று .. *
தொந்தியும்நாட்டிக்கொண்டுதொப்பைக்கூத்தாடிவந்தான் *

வசனம்.

அங்கோதெப்படியென்றால், தாசில்தார்நாடகத்தில்சபையார்களிக்கத்தக்க நீதிவிளக்கமுள்ள ஆசியங்கள்செய்யத் தொப்பைக்கூத்தாடி வருகிறவிதங்காண்க.

தொப்பைக்கூத்தாடிவருகிற-தரு.

இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

தொப்பைக்கூத்தாடிவந்தான்- சபைதனிலே
தொப்பைக்கூத்தாடிவந்தான்

அநுபல்லவி.

அப்பவர்க்கம்நுகர்ந்து ...... தொப்பைமிகவளர்ந்து
ஒப்பஆசியம்பகர்ந்து ........ கொப்பெனவேநடந்து (தொ)

[சரணங்கள்.]

கோணக்குல்லாத்தலை ... மீதிலேசூட்டிக்
குச்சுவிரிசொக்காயும் ... குதினிதிஜாருமாட்டிப்
புஜமாரமிலங்கப் ... புயத்தில்வலயம்பூட்டிப்
புதுமையாய்க்கையிற்கோணக்கோலைநீட்டிக்காட்டித்

(தொப்பை.)

பிதுக்கக்கடகங்கள் ... ... பிறங்கக்கைகளைவீசிப்
பெரியபட்டைநாமத்தைச் ... சாத்திச்சந்தனம்பூசிச்
சதுரியமொழிகளைச் ... சபைகளித்திடப்பேசிச்
சந்ததஞ்செய்வோரைச் ........ சத்துருசத்தெனநேசித்

(தொப்பை.)

[illegible]தன்னையெல்லாம் .... புகழ்பெற[illegible]
புத்திபுண்டாகநல்ல ........ சித்திரமானகோடிக்
கதைகளாசியஞ்சொல்லிக் ...... காட்டிவாதுகளாடிக்
களிப்புடனேவலிக்கார ........ ருடன்பலகூத்தாடித்

(தொப்பை.)

சபையில்-தொட்டிபைக்கூத்தாடி-சொல்

வசனம்.

சத்து-சத்து- காமூஷ்-காமூஷ்-சைலென்ஸ்-சைலென்ஸ்-பேசாதே- பேசாதே- மாட்லாடவத்து- மாட்லாடவத்து- காலிஜில்புடியாத போலீசு அதிகாரி வருகிறார் நாலீசுவரும் பார்த்துப்பிழையுங்கள்.

பொது-விருத்தம்.

திகழ்மணிமாடமேவுஞ்சென்னையாங்கடிஸ்தலத்தின் ... ... *
இகழ்வறுமரசிலெய்தும்இருபத்தோர்ஜில்லாதன்னில் ... ...*
புகழறச்சிலதாசீல்தார்புரியும்பொல்லாங்குக்கெல்லாம் ... *
மகிழ்ப்புரிந்திருந்தபேதார்வருகின்றார்சபைக்கிப்போதே ... *

வசனம்.

அழகிய மாடகோபுரங்கள் சூழாநின்ற சென்னைபுரி கடிஸ்தலத்தின் இருபத்தொரு ஜில்லாக்களைச்சேர்ந்ததாலூகாக்களிலிருக்கும் சிலதாசில்தாரர்களில் நன்மார்க்கந்தப்பிநடக்கும்தாஷிடிகபந்தில் என்னும் தாசில்தாரருடைய டபேதார்வருகிற விதங்காண்க.

தாலுகா முல்கிபோலீஸ் தபேதார்வருகிற

ஓரடித்தரு.

இராகம் - தோடி - ஆதிதாளம்.

பல்லவி.

தப்பேதாரரிதோவந்தார் - முல்கிபோலீஸ்
தப்பேதாரரிதோவந்தார்

அநுபல்லவி.

இப்பாரிலேவசிக்கும் ... ஏழைக்குடிகளென்னும்
அப்பாவிகளைக்கண்டு ... மெய்ப்பாய்மிகவுறைத்துச்
சப்பாணிக்குமுடிவன் ...... சண்டப்ரசண்டனென்னத்
தப்பாதப்பாவில்பெற்ற.........கிப்பாயத்தையுற்ற (தப்)

[சரணங்கள்.)

௧ தலைச்சரிகைச்சக்ரி ... ...... பாகைமிக்கத்துலங்கப்
பெட்டிடக்லாசொக்காய்...பிறங்குகம்மர்பந்தலங்கக்
கத்திகட்டாரிகண்ணிற் ... ... ...கண்டவர்மனங்கலங்கக்
கச்சையின்மேல்வெள்ளிபில்லை கனத்தமார்பிலிலங்கத்(தப்)

சித்திரமாகத் ... ... .... திருத்தியமீசையும்
சிங்கமெனத்தொனி ..... கர்ஜனையோசையும்

கொண்டுயாருமனம் ... பதறிவதறிமிகு
தொண்டுபோற்சர ... ணடைந்தொடுங்கிவெகு

கொற்றர்கள் - * - ஒட்டர்கள் - தச்சர்களு - நித்தமும்
வெட்டியில் - கட்டலில் - துட்டெனில் - அக்கணம்

அங்கவர்களையுதைக்க .. விழுந்தவர்கள்பதைக்க
இவ்விதமாய்வதைக்க ... இறந்தவரைப்புதைக்கத்-திறமுடன்

கொற்றவன்செய்- குற்றமதைச்-சற்றுநெஞ்சில்- உற்றிடாமல்

கோடிதந்திரமும் பொய்யும்
தேடித்தொந்தறைகள் ... செய்யும் (தப்போ)

தபேதாரார்சொல்-சட்டியம்.

சீர்பெருகுமிந்துதேசத்திலிங்கிலீஷ்காரர் ... *
செய்யுந்துரைத்தனத்தைச் ... ... *
சேர்ந்தவிருபத்தொன்றதானஜில்லாவிற் ... *
சிறந்தபலதாலுகாவில் ... ... *
தார்பெறுந்தாசில்தார்தாஷ்டீகபந்துலித் ... *
தரணியிற்பெயரெடுத்தோன் ... ... *
தான்செயுந்தீமைகளைவெளியிட்டஹேட்சிரஸ் *
தாவையும்மிகவடுத்தோன் ... ... *
ஏர்பெறுங்கிராமதிட்டத்திலோராயிர ... *
மிசைந்திடும்வகைதொடுத்தோன் ... *
எண்ணறுபுரட்டுகள்கணக்கர்செய்திடவே ... *
யிணங்கிநன்னெறிதடுத்தோன் ... ... *

---

*குடிகளுடைய சவுக்கியத்துக்காகக் குடிகிணறுகளை மராமத்துச்செய்யச் சர்க்காரில்-௫௰-௯௰-ரூபாய்-கொடுத்தபோதிலும்வீட்டுக்கொருஒட்டன்வெட்டிக்குவந்து வேலைசெய்துபோகிறதுண்டு.

௲௮௱௪௪௵ ஆகஷ்டு௴ ௮௳ ரிவினியூபோர்ட்டுசர்க்கியுலர் உத்தரவினால் கூலிக்காரரைப் பலவந்தமாகப்பிடித்து வேலைவாங்கி வரும் வர்டிக்கையை நிறுத்தக்கட்டளை.

௲௮௱௪௨௵ மே௴ ௯௳ உத்தரவினால் தண்டு சரீப்பராவுக்கு வண்டிக்காரரைத் தொந்தரவுபடுத்தக்கூடாது வாட்கைசரியாயும் தாமசமில்லாமலும் பட்டவாடா செய்யக்கட்டளை.

மட்டறும்போலீஸ்வழக்கில்வலியோர்க்குதவி ... *
மாறுதுசெய்யும்நேசன் ... ... *
மணியங்கணக்குகள்செய்விக்கவோராயிரம் ... *
வாங்கிவருகின்றபோஜன் ... ... *

துட்டர்க்கொட்டார்தமைத்துட்டரெனநெட்டிவன் *
தொழுவில்மாட்டிடுமுலாசன் ... ... *
துன்பமதுதீவர்த்திதிருடரைக்கொண்டுசெய் *
துஷ்டகாரியப்பிரவேசன் ... ... *

செட்டிசேணியர்தாஞ்செலுத்திடுந்தீர்வையிற் *
சிலகொள்ளையரடுதீரன் ... ... *
தே * ரில்விலைமாட்டுராதாரியில்வரும்பணம் ... *
தின்னவுறவாடுசூரன் ... ... *

மடியவழக்கினோர்பெண்ணுருவுகண்டே ... *
கெடுக்குமயல்கொள்ளுமாரன் .. *
கிணற்றில்வீழ்மரணமெனிலிதுவோர்கந்தாயம் *
கிடைத்ததென்றுன்னும்வீரன் ... ... *

தேவர்கோயிற்சொத்தையுந்தருமகர்த்தனொடு *
தின்னும்மகாபுண்ணியன் ... ... *
திருடருக்கு[illegible]கையாய்த்திரளானதிரவியம் ... *
தேடும்பிரபஞ்சதிண்ணியன் ... ... ... *

சாவாய்ப்போனபயிருக்குஞ்சரித்தீர்வை ... *
ஸ்தாபித்திடும்நுண்ணியன் ... ... *
சத்திரஞ்சாவடிக்குரியவருமானமுஞ் ... *
சாப்பிடும்அக்ரகண்ணியன் ... ... *

பாவபுண்ணியமதைக்கனவிலும்நினையாத ... *
ப[illegible]பாவியாம்பிரசண்டன் ... ... *
பன்னுபஞ்சாயத்தினிற்பக்ஷபாதமாய்ப் ... *
பண்ணுதீர்ப்புக்கொர்வண்டன் ... ... *

தாவுபிரியாதில்தனந்தராவிடிலதைத் ... *
தக்ஷணந்தின்னுமிண்டன் ... ... *
தாசில்தாரானவர்சபைக்கிதோவருகிறார் ... *
எல்லருமெச்சரிக்கை ... ... ... *

---

* ரதஉற்சவம்.

தொப்பைக்கூத்தாடி

தபேதாரனுக்குச் சொல்-வசனம்.

அய்யா, தபேதார் சலாம்வருகிறது, (தபேதார்) அடே நீஆரடா அம்டபாண்சோத் வயத்தைப் பார்த்தால் வண்ணான் சால்போலிருக்கிறது. நெற்றியில் நாமத்தைப் பார்த்தால் கோவில் திருமதிலுக்கு மாணிக்கப்பட்டை யடித்தாப்போ லிருக்கிறது, தாடியைப் பார்த்தால் குறும்பாட்டுக் கடாப்போலிருக்கிறது, உன்பேரென்னடா (தொ) ஐயா, தபேதார் உமக்குப்பிருதாயிருக்கிற கிருதாமீசையைப்பார்த்தி விருதாவாகத் தபேதார் உத்தியோகங் கொடுத்தார்களே அதனால் மிகவுங்கிருதாயிருக்கிறீர் நம்முடைய அரிதான தாடியைப்பார்த்து பெரிதாயெண்ணி ஏதாவது ஜமேதார் உத்தியோகங் கொடுப்பார்களென்று உறுதியாய் நம்பி உமேது செய்யவந்தேன் நம்மிடபேர் தொப்பைக்கூத்தாடி நீதிசாகரமென்று சொல்லுவார்கள்.----(தபே) ஷாபாஷ்-அடே யப்பா பேர்மிகவும் பலமாயிருக்கிறது ஏகமாய்க் காத்துக்கொண்டிரு.

பொதுச்சந்தவிருத்தம்.

தடநிறைகடல்புடைவளைபுவியுழவுசெய்குடிபகுதியைவாங்கத்... *
தொடர்தருமிவன்மிகுதிடமுளனெனுமுறை துரைமனதினில்நம்பி
நடபடியறியுமென்நவுகரிதனிலிருநலமுடனென்னெழுதத் ... *
தடபடமெலாமகெடிபடிபுரிதாசில்தாரரும்வந்தாரே ... *

வசனம்.

அகோதெப்படி யென்றால், தேசத்துக் குடிகளிடத்திற் சர்க்கார்தீர்வைகளை வசூல்செய்யக் கணிசமான குடும்பசம்பந்தமுள்ளவனாகவும், நன்னடக்கைக் குரியவனாகவும், தக்க கல்வித்திறமுடையவனாகவுமிருக்கிற * ஒருவனைச் செவ்வையாய் விசாரித்துத் திர்ப்திகரமாகத் தெரிந்துகொண்டு நியமிக்கப்படுமுன்னமே பேஷ்காரா யிருக்கும்போதோ - அல்லது - அமீனுவா யிருக்கும்போதோ வருகிறபோகிற சில துரைகளுக்குக் கொழுத்தமேஜாடும், கோழிக்குஞ்சும், முட்டையும், குடியானவன்கழுத்தை யொடித்து வாங்கிக்கொடுத்துத் தயவு சம்பாதித்தோ - அல்லது - ஹெட்சிரஸ்தாமு

---

* ௲௮௱௫௰௯ ஜூலை௴ ௨௰௨ உ ரிவினியுபோர்ட்டு சர்க்கியுலர் உத்தரவினால்கல்வியும்நன்னடத்தையுமுள்ளோரைப்பார்த்துதாசில். உத்தியோகத்துக்கு நியமித்து அலுவல்களை நிதானமாய்யோசித்து நடத்தும்படி செய்யக்கட்டளை.

தலாகியபேர்களுக்கு இஷ்டம்வரநடந்தோ - ஏதோ ஒருவிதத்தில் அவர்களால் சிபார்சுசெய்வித்துக்கொண்டு நியமிக்கப்பட்டு - லஞ் சம்வாங்கவும், அநேகவிதப்புரட்டுகள் செய்யவுமாத்திரம் கற்றறிந் த மகாசமர்த்தராகிய- இராஜமானிய இராஜபூஜித மகாராஜ ராஜஸ்ரீ மேலும் மகாராஜ ராஜஸ்ரீ குடியண்டை - பணமண்ட- அதிதண்ட எமகண்ட தாசில்தார்-தாஷ்டிகபந்துலு வருகிறவிதங்காண்க.

தாசில்தார்வருகிறதரு.

இராகம்- மோகனம்- ஆதிதாளம்.

பல்லவி.

தாசில்தாரர்வந்தார் - தடபடலொடு கடிபடிசெயத்தரு
தாசில்தாரர்வந்தார் ... ... ... *

அநுபல்லவி.

காசுக்குக்குடிகளைக் ... கண்டபடிதிட்டவும்
கைக்குக்கிட்டிக்கோல்போட்டுக்... கம்பத்திலேகட்டவும்
கழுத்தில்வடத்தை மாட்டி
இழுத்துப்பயத்தைக் காட்டிக்
கனற்கோலினாற்சுடவும்-தனக்கேற்றாற்போலாடவும் (தாசில்)

[சரணங்கள்.]

தர்க்கிட்டிகிபாகை தகைபேட்டு அங்கரக்கா
சரிகைதோவத்தி தரித்து - அனாதனில்
தங்க அரைஞாணுந் தருமோதிரங்களும்
தகதகவெனப் பரித்துத்
திக்குகள்நிறையவே ... சேவகரோடவும்
தேவடியாள்கள் ... அநேகர்வந்தாடவும்
முக்கியமுரசொலி ... சொர்க்கம்போய்மோதவும்
ஒக்கப்பறையர்கொம்பு ... கொக்கரித்தூதவும் (தாசி)

பஞ்சதாளத்தட்டுப் பரிமீதிலே முகமல்
பட்டுசீனிவைத் தேறிக் - கிஸ்திக்காகப்
பணங்கட்டாக் குடிபட்டா மணியக்காரர்களையும்
பாராவில்வைக்கக் கூறி
நெஞ்சிலிரக்கமின்றி-நெட்டிக்கன்னத்தில் தட்டி
நிறுத்திவெயிலில்மிக ... நிஷ்டூரமாகத்திட்டி

வஞ்சனையிற்கொடிய...... நஞ்செனப்பன்னவும்
பஞ்சைகளைக்கெடுக்க......... ரஞ்சகமென்னவும்(தாசீல்)

வெட்டியானும்பல வெட்டியாள்களும்
வேலையோயாமற் செய்ய-அழுதுகொண்டே
விறகுதயிர்பாலொடு வேண்டியகாய்கறிகள்
விலைபெருமற் பெய்யத்
திட்டமாகவேலஞ்சம் ... வாங்கிக்கவுல்கொடுக்கத்
தேவையில்லாநிலத்தைத் ... தரிசுதனில்விடுக்கச்
சட்டவட்டமாய்ப்பேசிச் சகலரையுந்தெட்டவும்
மட்டில்லாமலேயூரில்......... மரத்தாலிகட்டவும்(தாசீல்)

தாசீல்தாரர்-கச்சேரிச்சேவகர்முதலிய

நவுகரிகளுக்குச் சொல் விருத்தம்.

அஜீதபே அப்துல்காதர் அரோஜவான் கோன்ரோயாம்ஹோ.......*
பஜாரியாம் ஜாடுமாலி பாபிமஷ்ஷால்சீ திம்மா ....................*
அஜ ருதாக்கீது யாதாஸ் தனேகம்வந் திருக்குதிப்பேர்.........*
சஜாறு வுடன்கச்சேரி கடுகிநீர் சித்தஞ்செய்வீர்.....................*

வசனம்.

அஜீதபேதார்-அப்துல்காதர் (ஜீமஹாராஜ்) கோன்ரோஜவான் (ஹஜரத்) ஒசெஜாடுமாலிபஜாரிபாபி ஐயா ஒரோமஷால் ஜீதிம்மா (தேவரா) எல்லோரும்ஜாக்ரதையாயிருக்கிறீர்களா,---இருக்கிறோம் சுவாமி - அசூரிலிருந்து தாக்கீது யாதாஸ்து அநேகம்வந்திருக்கின்றது கச்சேரிக்குவருகிறோம், எல்லாம்சித்தப்படுத்தவேண்டியது.

அஜிதபேதர் - (ஹ ஜரத்) சிரஸ்தேதார் - அஜமாஷிதார்-ஷ்பயிமாஷிதார்-ஜில்லெதார் - மஜமதார் - தரப்தார் - ஜமீன்தார்- கில்லெதார்- இஜாரதார் - சுரோத்ரியதார் - மிட்டாதார் - முதலாகிய பேர்வந்திருக்கிறார்களா.

ஹ்ராஜர் இருக்கிறுங்கோசாமி - அஜிசோப்முனிஷி - எட்குமஸ்தா-நக்திகுமஸ்தா- மராமத்குமஸ்தா - ராயசம் - ஒத்தாசை- எட்சராப்-டிப்டிசராப்-கொல்லர்வந்திருக்கிறார்களா.

(ஜீஹோ) நாகோஜிராவ்- நாராயண்ராவ்- நரஹரிராவ்-நரசிங்கராவ்- நானுராவ்- பீமராவ்- சாமராவ்- சோமராவ்- ராமராவ்- பீ

ம்சேனராவ்- பாஸ்கரராவ்-பாலாஜிராவ்-பாபுராவ்-அப்புராவ்-குப்புராவ்- கோவிந்தராவ்- கோபாலராவ்- குண்டுராவ்- கண்டேராவ்-கணேசராவ்- கங்காதரராவ்-அண்ணாஜிராவ்-ஆனந்தராவ்-அரிதரராவ்-கிரிதரராவ்- அச்சுதராவ்- அநுமந்தராவ்- சங்கரராவ்-தாதாராவ்-தம்பாஜிராவ்- மத்துராவ்-மாதவராவ்-ரங்காராவ்-ராகவேந்திரராவ்- ராமசந்திரராவ்-ரகுநாதராவ்-புஜங்கராவ் - வந்திருக்கிருக்கிறார்களா, எல்லாராவுகளும் வந்திருக்கிறுங்கோ சாமி- சவடப்பா-சீனப்பா- அநுமப்பா- * இவர்கள்மாத்திரம் வரவில்லை.

தொப்பைக்கூத்தாடி

தபேதாரனுக்குச்சொல்-வசனம்.

சலாமையா தபேதாரரோ எல்லாராவ்பேரும்தார்பேருஞ்சொன்னீர் உம்மேதுவார் பேர்மாத்திரஞ்சொல்லவில்லை நம்முடையபேருஞ்சொல்லும். (தபேதார்) அரோபாண்சோத்- கருடன்பறக்க-அதற்குச்சமானமாய் ஒருகொசுகுபறக்க எத்தனப்பட்டதுபோல நீநம்மோடு நானுமொருவெள்ளாயன் நக்குமொருதலைவரைகையென்றுவருகிறாய் சக்கனாயும்மாவுஞ் சரியாகுமா, போடாபாண்சோத்பேசாமலிரு-(தொ) ஐயா, பெருவெள்ளம்பாயுங்கடலிலே ஒருசிறுவாய்க்காலும்பாயும்- பூவோடுகூடி நாரும்மணம்பெறும்-அனாச்சொல்கொண்டு அம்பலம்ஏறினால் அனாச்சொல்லும் முழுச்சொல்லாம்- அரோபாண்சோத் அப்படியா அப்புறஞ்சொல்லுகிறேன்கத்தாதே சும்மாயிரு (புத்தி) (புத்தி.)

தாசீல்தார்-தபேதாரனை விசாரிக்கிற

விருத்தம்.

(தா) கச்சேரியின்தபேதாரரோசேவகர் ... *
காத்திருக்கின்றார்களா ... ... *

(தபே) உச்சாகமொடுபோனிலிருக்கின்றதிருடனா ...*
ஓரோசேவகன்காக்கிறான் ... ...*

---

* ரிவினியுடிபார்ட்டுமெண்டில் பெரும்பாலும்தேசஸ்தப்பிராமணாள் இருக்கிறார்களென்பதை காட்டக்கூறியது.

௲௮௱௫௰௬ மார்ச்சிமீ ௩௨ ரிவினியுபோர்ட்டு உத்தரவினால் கலக்ட்டர்கச்சேரியில் இரண்டுசிரஸ்தாதார்களும் தேசஸ்தப்பிராமணாளாக இருக்கக்கூடாது பிராமணாளைப்போலவே மற்றஜாதிஜனங்களும் தாசில்தாரர்களாக நியமகப்படவேணுமென்று கட்டளை.

(தா) பணப்பெட்டியைச்சுற்றிச்சேவகர்நாலுபேர் ... *
பாராகொடுக்கிறுரா ... ... *

(தமே) கணக்குக்குநாலுபேர்ஒருவனையுமவ்விடம் ... *
காணபதேஅருமைஐயா ... *

தாசீல்தார்சொல்-வசனம்.

ஒபட்டேவலோகாங்கு அக்கல்நை-தாயோளிங்களுக்கு புத்தியி ல்லே- அஜ ருக்கெழுதி வாயில் மண்ணைப்போடும்படி செய்துவிடு கிறேன்- சந்தைக்கடையில் அள்ளெடுக்கிறதற்குப் போனுர்களோ என்னமோ - பிள்ளையைக் காப்பாற்றிக் கொள்ளச்சொல். (அச்சா மஹாராசீஜ்.)

கஜானு ஷிராபுகளுக்குச்சொல்- விருத்தம்.

(தா) சராபுபுல்லையசெட்டிசரியாயிருப்பினைச் ... *
சடுதிதான்பார்த்தீர்களா ... *

(சரா) காரரதாய்ப்பார்க்கிறேம்*கையாண்டதொகைபோகக்
கையிருப்புச்சரிசரி ... ... *

(தா) வந்தபணம்பாவையும்பரகாமணிசெய்து *
வைத்திடும்பெட்டிகளிலே ... *

(சராப்) வந்ததெல்லாம்செலவழிந்திருப்பினிலுங்கே *
வைத்திடும்படியாச்சுது ... ... *

இராயசக்காரனுக்குச்சொல்-விருத்தம்.

(தா) இசைவாகவாசிக்கும்ராயசக்காரனே ... *
ஏதாவதுண்டோசொலு ... *

(ரா) அஜ ருதாக்கீதுடன்தாக்கீதுயாதா ... *
ஸ்தனேகம்வந்திருக்குதையா ... *

(தா) முக்கியமாய்த்தாக்கீதுமுன்னதாய்வாசித்து ... *
முறையோடுரைத்திடமோ ... *

(ரா) திக்கற்றஙைகக்கோளர்செலுத்தாதமோதர்பாச் . *
செய்தியைப்பற்றியொன்று ... *

---

* ௲அ௱௫௰௯வது நவம்பர் ௴ ௰௪௳ உத்தரவினால் முன்னெச்சரிக்கைகொடாமல் தாலூகா கஜானுவை அப்போதைக் கப்போது கலக்டர்கள் ஜப்திப்பார்த்து வரவேண்டுமெனக் கட்டளை.

(தா) கைக்கிட்டிமாட்டிநாம் வந்தசெய்தியிலையெனக். *
கரவாகவெழுதுவீரே ... ... *

(ரா) கூடைகட்டுங்குறத்தியை யன்றுநாம்கொன்ற ... *
கொலைக்கேசுவந்ததையா ... *

(தா) கூடிப்பேஷ்கார் செய்குசலமென்றிதைநீ ... *
குறிப்பாகஎழுதுவாயே ... ... *

(ரா) சிலகுடிகள்கிஸ்திமேல் தகராறுசொல்வதாய்ச் ... *
செய்திவந்திருக்குதையா .... *

(தா) கலகஞ்செய்குடிகளைக் கண்டாஜர்செய்யவே *
கட்டளையனுப்புவீரே ... *

தொப்பைக்கூத்தாடி சபையாரைப்பார்த்துச்

சொல்-வசனம்.

ஆ-ஆ-ஆ-ஆ-ஓ, ஓ, ஓ,ஓகே, ளுங்கள், கேளுங்கள், போனில் அடையப்பட்டிருக்கிறகயிதிகள்பேரிலும், கஜானாவின்பேரிலும் கிரமமாகச்சேவகர் பாராகொடுக்கிறார்களாவென்று தாசில்தார்ஜோராகக்கேட்டால் அதற்குதபேதார் நேராகவுத்தரவுகொடாமல் கணக்குக்கு நாலுபேர் ஆனால் ஒரேசேவகன் காக்கிறானென்கிறார்---கஜானாவில் பணஞ்சரியாயிருக்கிறதாவென்றுகேட்டால் அதற்குச்சராபுகராராக உத்தரவுசொல்லாமல் கையாண்டதொகைபோகக் கையிருப்புச்சரிசரியென்கிறார். இந்தஅநியாயத்தையாருடன் சொல்லுகிறது, ஆனையிருந்துகொண்டு அரசாளுமண்டபத்தில் பூனையிருந்துகொண்டு புலம்புகிறதுபோல மகாப்பிரபலமான இந்த அதிகாரஸ்தானத்தில்தக்கதிறமுடைய சரியானநடத்தையுள்ள ஒருவர்வைக்கப்பட்டிராமல் இப்படிப்பட்டவரிருப்பதால்இந்தப்படிநேரிடுகிறது இருக்கிற நாற்பதுசேவகரில் தாசீல்தார்வீட்டுவிறகு - வைக்கோல்- இலை- காய்கறி- இதுகளுக்காகவும், அவருடையசொந்தப்பிரயோசனத்துக்காகவும், கிராமாந்தரங்களுக்குப்போக எழெட்டுப்பேர்வீட்டுத்தயினாத்தில்-இரண்டுபேர்- கொம்புபிடிக்க ஒருவன்-சிரஸ்தாவீட்டில் ஒருவன்- தயவுபெற்ற ஒத்தாசைக்காரன்வீட்டில் உமேதுதயினாத்துக்கு இரண்டுபேர்- தலாலிவிஷயத்துக்கு இரண்டுபேர் - கூத்திவீட்டுக்கிரண்டுபேர்,இந்தப்படியானால் பணம்வசூல்சர்க்கார்காரியத்துக்கும், கசானாவுக்கும், எத்தனைப்பேரிருக்கப்பேர்கிறார்கள் கசானாவைப் பூதந்தான் காக்கவேண்டும் கிரமமானபாராவும் வி

சாரணையுமில்லாததினால் தானேபாராக்காரர் தூங்கித் திடுக்கென்று விழித்துக்கொண்டு ஆறுமணிக்குப்பனிரண்டுமணியும் பனிரண்டுமணிக்குஆறுமணியும், அடித்துவருகிறார்கள். மேலும்வேண்டியபோது எசமானும் வர்த்தகம்நடத்தவும், வட்டிக்குக்கொடுக்கவும், சராபுஷ்கசானாவில் கைவைத்துக் கொண்டேயிருந்தால், கசானா எந்தப்படி சரியாயிருக்கும்.

தாசில்தார்-தபேதாருக்குச் சொல்

விருத்தம்.

இடர்செயக்களிக்குந்தப்பேதாரனேயிக்கணத்தில் ... *
அடமுறநிலத்தின்தீர்வை அதிகமென்றேயுரைத்துக் ... *
கெடுவுகள்கடந்துங்கிஸ்திகிடையாதென்றேய்க்கப்பார்க்கும் ... *
குடிகளை அழைத்துக்கொண்டுகுடுகுடென்றோடிவாராய் ... *

வசனம்.

கரடிபோலப் பார்க்கப்பயங்கரமான கிருதாமீசையையும் சிங்கம்போலக்கர்ஜனை ஓசையையும், கடுஞ்சொல்லையுங்காட்டிக் குடிகள் கிடுகிடென்று நடுநடுங்கிப்பதுங்கி ஒதுங்கிவணங்கி யிணங்கச் செய்யத்தக்கவல்லமையுள்ள அஜீ தபேதார் (அசரத்.) குடிகளுக்குய்யோமுறையோ சாகுபடிசெய்ய நிர்வாகமில்லை ஐயோவென்று அழும்போதுதானேபலவந்தமாகக்காடுமேடுகரம்புகளையெல்லாம்அவர்கள்கழுத்திற்கட்டி அதிகதீர்வைகொடுவென்றுகேட்கக் கொடுக்க நிர்வாகமில்லாமல் இப்போது பணங்கிடையாதென்று குப்புறப்படுத்துக்கொண்டு எப்போதும்அழுகிறதப்பிலிப்பயல்களை யிப்போதே திட்டி நெட்டிக் குட்டி அட்டியில்லாம விட்டுக்கொண்டுவாருங்கள். (அச்சாமகாராஜ்.)

தபேதார் கிராமத்திற்குப் போய்

அவ்விடத்திற்செய்யும் ஆரவாரம்.

அடேபாண்சோத், கிராமத்தில் தோட்டி தலையாரி ஆரடா (ஐயா) இதோஇருக்கிறேன் இதோஇருக்கிறேன், மாதர்சோத், எங்கேபோனாய், செயிலேக் மார்படவே, மணியக்காரன் எங்கே, கணக்கனெங்கே, அடேபடவே, வேலப்பகவுண்டன், வெங்கடாசலகவுண்டன், நாச்சிமுத்துக்கவுண்டன், நாராயணகவுண்டன், கங்கிரெட்டி, ரங்கிரெட்டி, சுந்தரமுதலி, சுப்பராயமுதலி, கவுட்டப்பன், குடப்பன், எங்கேபோனுங்கோ, அளையடாபடவே, சாமி

ஆல்லாம் வந்திருக்கிருங்கோ என்னஒப்புத்தியில்லெஉங்கள்கிருத்மே லே'உதைச்சிபணம்வசூல்செய்யச்சொல்லிஹுக்கம்வந்திருக்குது நீங்கோசும்மாசும்மாபணமில்லெயெண்ணு அரகத்பேசிதபாய்க்கிங்கோ அண்ணு சுபேதாருக்கு நான் சொல்லிப்போட்டால் உங்கள் பேச்சி அப்போதெரியும் நடங்கஒய்-காண்குடிகுடுக்கப்போறேன் காண்மஜாக் பண்ணுறிங்கோ-உங்கள்கி மாமூல் மரியாதீதெரியாது.

குடிகள் சொல்-வசனம்.

சலாம் ஐயா தபேதாரமோ, எல்லா மரியாதையுந் தெரியும்-கோவித்துக்கொள்ளாதேயும் உட்காரும், சாவடியிலிறங்கிச் சமையல்செய்துகொள்ளும்.

தபேதார்சொல்-வசனம்.

அடெயென்னஒய் - ஆடு இல்லெ - கோளியில்லெ - கோளிமுடையில்லெ - கஞ்சாயில்லெ- மாதர்சோத் கடைக்கார சோமுட்டியெங்கே போனுன் - பான்சோத் - சாராயக் கடைக்காரன் எங்கே போனுன்-போனதடவை சப்பைதண்ணி சாராயங்குடுத்தான் - சப்பாயிசாராயங்குடுக்கலே-ஆகட்டும்பான்சோத் ராத்திரிபன்னெண்டு மணிக்குமேலே சாராயம் விக்கிறுன்சொல்லி அதிகபட்டி யிறக்குறுன்சொல்லி பிடிச்சிகினுபோய் மாட்டிவிடுறென் பான்சோத்.

தலையாரி-வசனம்.

ஐயா, ஒரு ஆடு-ரெண்டுகோழி-பத்துமுட்டை- சாராயபுட்டிகள்-செலவுக்கு பத்துரூபா இதோ கொண்டுவந்தோம் ஐயா.

தபேதார்- வச்னம்.

அச்சா பான்சோத்-ஐயா-ரெட்டி ஐயா- முதலியார் சீக்கிரம் கச்சேரிக்குப் புறப்படுங்கோ ஐயா (இதோ வருகிறோம்.)

பொதுவிருத்தம்.

விசித்ததாரிசுக்குந்தீர்வைவெட்டிக்குஆடுகோழி ... ... *
அடித்துண்ணுங்கணக்கருக்கும்அமுல்தாரர்முசத்திகட்கும் ...... *
இடுக்கிட இமிலசைசெய்யுஞ்சேவகர்தமக்கும்லஞ்சம் ... *
கொடுத்தையோகெட்டுப்போனகுடிகளுமிதோர்வந்தாரோ ... *

வ ச ன ம்.

...டில்லெ- ஆளில்லெ- விளையில்லெ- நிர்வாகமில்லெ- நாதாரியென்று சொல்லிக்கொண்ட போதிலும் ஜாஸ்திதீர்வையுள்ள தரிசுநில

ங்களைத் தலை * மேல்ப்போட்டுக் கேழ்க்கிற தீர்வையும், லஞ்சமும், கொடுத்துக் கொடுத்துக் கெட்டுப்போன எளியகுடிகள்வருகிற விதங்காண்க.

குடிகள்வருகிற-தரு.

இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

குடிக்கக்கஞ்சிக்கும்அல்லால்-உடுக்கக்கந்தைக்குமில்லாக்
குடிகளிதோவந்தார்-ஏழைக்-குடிகளிதோவந்தார் ... *

அநுபல்லவி.

படிக்கவும்எழுதவும் ......பேசவுந்தெரியாது
பகருஞ்சூதுவாது........... யாதுமறியாது
பற்றி-யிழுத்து-மிரட்டி-யுதைத்துவ
ருத்திட-மெத்த-நடுக்க-மெடுத்திதோ (குடிக்க)

[சரணங்கள்.]

அதிவரிகுறையவில்லை ............ அதைத்தரவழியில்லை
நதியில்நீருமில்லை ............... நன்செய்விளைவுமில்லை
இதைமனதில்நினைந் .......... துருகியேயழுது
வதைசெயும்ராயர்தம் ........ பதமலர்தொழுது
எய்ப்பு-மிளைப்பு-முறைத்து-மனைக்குளி
ருப்பு-மழித்து-வருத்த-மிகுத்திதோ (குடிக்க)

சாகுபடிக்குலஞ்சம் ............ தரிசுவிடுக்கல்ஞ்சம்
தரம்வஜாவுக்குலஞ்சம் * தகரார்களுக்குலஞ்சம்
வாகனசரபராவுக்குக் .................... கொஞ்சம்
ஆகமசாஸ்திரிகட்குக் .................. கொஞ்சம்

---

* ௲அ௱௫௰௨ வருஷம் அக்டோபர்மீ ௰அ௳ உத்தரவினல் குடிகள் சாகுபடிக்கு வைத்துக்கொண்டிருப்பதைவிட அதிகமாய்த்திட்டத்தில் ஜாஸதிபேரீஜ் காண்பிக்கவேண்டிய கருத்துடன் தாசில்தார்கள் பலவந்தமாய் பூமிகட்டவேண்டியதில்லையென்றுகட்டளை.

---

* ௲அ௱௫௰௬ வருஷம் ஆகஸ்டுமீ ௩௳ உத்தரவினல் விளைவாகுமாகுலின்பேரில் பூமிக்குத் தரம்போடாமல் அதனுடைய குணத்தின்மீது நிஷ்கரிஷைபண்ணவேணுமென்றும் புன்செயின்இரண்டாவது போகத்துக்காக வேறேதரம் வேண்டியதில்லையென்றும் பிராமணன் முசல்மான் என்கிற முகாந்தரத்தினல் தரம் கம்மிசெய்யவொண்ணாதென்றும் கட்டளை.

மணிசெல-வழியவும்-எருதுக-ளொழியவும்
பணிபல-தொலையவும்-வெகுகட-னுடனிதோ (குடி)

திண்டிக்கலந்தேயொட்டி - தொண்டிக்கோமுட்டிசெட்டி
அண்ணட்டத்தினமுமொட்டிக் ... கொண்டகடன்வட்டி

தண்டவேய்வன்கோர்ட் ... டினில்வழக்காடவும்
குண்டைகள்சகலமும் ... ஏலத்திற்போடவும்

சந்தத - நெஞ்சு - வெதும்பி - யெரிந்திட
நொந்து - தளர்ந்திலை - தஞ்ச - மெனும்படி (குடிக்க)

தபேதார்தாசில்தாரருக்குச்சொல்

வஞ்சி-விருத்தம்.

செழித்திடுங்கிராமகிஸ்தி........ *
முழுத்திடநினைத்தெப்போதும் *
கொழுத்திடுங்குடிஜனத்தை ... *
இழுத்திதோவந்தேனையா ...... *

வசனம்.

மஹாராஜ - நாலுவருசமாய் நல்லாசெளித்திருக்கிற கிராமத்திலிருந்துகினு கிஸ்தியை முளுத்துறத்துக்கோசம் கெதியில்லை கெதியில்லை யெண்ணுசொல்லிகினு - கம்மங்கூளும், புளிச்சத்தண்ணியுங் குடிச்சிக் கொளுத்துப்போய் இந்தக்குடித்தனக்காரர் பணங் கேட்டால் என்னமோ மஜாக் சொல்றுங்கோசாமி- வாஜிபில்பணங் குடுக்கிறதில்லை- காண்குடிகுடுத்தாதான் குடுப்பாங்கோசாமி.

தாசில்தார் சொல் வசனம்.

அஜீதபேதார்-ஓரண்டேச்சா வேலப்பகவுண்டன்கு புலாவ் பயிசேக்கு வுனே கியாபோல்த்தா- அடே வேலப்ப கவுண்டா பணத்துக்கு என்னசொல்றே.

வேலப்பகவுண்டன்-வசனம்.

நம்மிட தோட்டக் கிணற்றில் தண்ணீரில்லாமையால் விளைச்சலில்லாமல் கந்தாயஞ்செலுத்த நிர்வாகமில்லைசாமி.

(தாசில்) அஜீதபேதார் ஓலவுண்டிச்சரவை சோறுதண்ணிக்கு விடாமல் அண்ணாந்தாள்போட்டு வெய்யிலில்நிறுத்து.

அஜீலால்நாயக் - மோதின்கான் - நாச்சிமுத்துகவுண்டன்கு புலாவ் (வந்தான்சாமி) பணஞ்செலுத்த என்னதகரார், சாமி ராக்காலத்தில் பட்டியில் ஆடு பறிப்பாகிறதும், வடக்கயறு முதலானதெல்லாம் நித்தம் நித்தம் திருட்டுப்போகிறதுமானல் கந்தாயங் கட்டுகிறதெப்படி, அதையெல்லாந் தருவித்துக்கொடுத்தால் கந்தாயஞ் செலுத்துகிறேன் இந்த லுச்சா லவுண்டிமகன் கழுத்தில் எலும்புமாலைபோட்டுக் குதிகாலில்செங்கல்லைவைத்து உட்காரவை ஒகத்தே கண்டா சங்கிரெட்டிக்கு புலாவ் (ஹ யேசாப்) ஒரோலவுண்டி கொடுக்கா - ருக்கலுக்கு எமிசெபுதாவு - தேவரா மூடுசம்மச்சரமுகாவானலேக வருஷம்லேகசேனு துக்கிசேசிவித்திசேத்தி லுஞ்டேதிபோய் ருக்கலு யாடானுண்டி யிஸ்துமுசாமி ※ அஜீ தபேதார் - இவனுக்குக் கழுதைசவாரிசெய்து வெய்யலில் நிற்கச்செய் (அச்சாமகராஜ்) ஒபடவேரங்கிரெட்டிக்கு புலாவ்; ருக்கலுக்கு எமிசெபுதாவு, தேவரா துன்னேயெத்து ஆவு கொட்டு அந்தாதொல்லிபோய ருக்கலுக்கு தநிலேதுசாமி காபாடவலெனு.

அஜீதபேதார் - ஒ பான்சோத்கு லேஜாக்கர் மரத்திற்கட்டித் தொங்கவிட்டுக் கீழே நெருப்புப் போட்டுக்கொளுத்து (அச்சாமகராஜ்) தபேதார் - ஒ முதலிக்குபுலாவ் (ஹ யெசாப்) ஓ என்னஓய் முதலி சர்க்கார்பணத்தைக் கட்டாமல்தலையெல்லாம்அரட்டலாய்ப் பேசுகிறாய் - என்னசுவாமி இதுவரையில் எங்கள்பெரியவாளெல்லாம் நன்றாய்ப்பிழைத்தவர்கள் அது தங்களுக்குந் தெரிந்தேயிருக்கிறது மரியாதைக்குக் குறைவாய்ப்பேசினால் எப்படி - வாரக்காரநாய் தோட்டத்திற்குள்சேர்ந்து இருவாரமும் வாயில் போட்டுக்கொண்டுபோனான் பத்துநாளைய கெடுவுகொடுத்தால் ஜாடாவாய்ப்பணத்தைச் செலுத்திவிடுகிறேன் - முதலியாரே வெகுலக்ஷணம் பெரியவர்கள் பிழைத்தது இருக்கட்டும் பணத்தைச்செலுத்திப்போட்டுப்போம் - அஜீதபேதார் (ஜீ) எகத்தேக்கு தொப்புளில் பிள்ளைப்பூச்சியாவது, குளவியாவது, வைச்சுக்கட்டு (அச்சாமகராஜ்) ஒசுவர் சுந்தரமுதலிக்குபுலாவ் (ஹுயெமகராஜ்) என்சாணும் முதலியாரே பணத்துக்கு என்னசொல்லுகிறாய், சுவாமி இரண்டரைக் காணிக்குப்பட்டயம் அங்கே - ஹுறு - காணிக்குவழியில்லை - அளந்துகொடு

---

※. ௲அசகவுந் ருன்ஸ்ரீ யௗவு உத்தரவினால் சர்க்கார் பாக்கி வசூல் பண்ணுவதில் குடிகள்மெலிந்துபோகக் காரண்மாயிருக்கும் பழையபாக்கிகளை அப்போதைக் கட்போது கணக்கிலிருந்து தள்ளி அப்படிக்கு ரிமிஷன்செய்த உத்தரவைப் பிரசித்தப்படுத்தக் கட்டளை.

க்கிறதுமில்லை - துரையிடத்துக்கு அனுப்பிவித்தால் போகிறேன்- தபேதார் ஒகத்தேக்கு - மிளகு - உப்பு - கடுகு - இதுகளைக்கலந்து தூளாக்கி மூக்கிலேற்றிக்கண்ணிலும்போடு (அச்சாமகராஜ்) ஒய்ரங் கய்யங்கார் (சுவாமிநமஸ்காரம்) பண்ஞ்செலுத்த என்னசொல்லு கிறீர்காணும், குடியானவனுக்குக் குத்தகைக்குக் கொடுத்துவிட்டு ஸ்ரீரங்கத்துக்கொட்டாய் உற்சவத்திற்குப்போய்விட்டேன்குத்தகை நெல்லுங்காணேன் குடியானவனையுங் காணேன். எஜமானரவர்கள் நெல்லு வசூல்செய்துகொடுத்தால் விற்றுப் பண்ஞ்செலுத்துகிறே ன் கையில்பணமில்லை - என்னகாணும் நெல்லுவரவேணுமென்றால் கோர்ட்டுக்குப்போம் சர்க்கார் பணத்தைச் செலுத்தும், அ ஜ்த ப தார் (ஜீ) இந்தஐயங்காரை எறும்புப்புற்றில் உட்காரவை - (அச்சா) ஒய்சிங்கய்யங்கார் (சுவாமிநமஸ்காரம்) கந்தாயம் ஏன் செலுத்தவி ல்லை - நாமென்ன சொல்லுகிறது குத்தகை நெல்லைவிற்று மேலைக் கோட்டைக்கும், ஆழ்வார்திருநகரிக்கும், திருப்பதிக்கும் போயிரு ந்து நூற்றளிகைவிட்டோம் பெருமாள்கைங்கரியம் செம்மையா ய்நடந்தது - அந்தப் புண்ணியமெல்லாந் தங்களுக்கே கிடைக்கும் சரிசரி நன்றாயிருக்கிறதுகாணும் மேலைக்கோட்டை நாமம் கொண் டுவந்திரோ இருக்கிறதுசுவாமி. *

அஜீதபேதார் (ஜீ) உஸ்கு அக்கல்நை கைக்குக் கிட்டிபோட்டு த்தொடையைதிருகிட்டு - தபேதார் (ஜீ) அந்தப்பிள்ளை நாச்சியையு ம், பேச்சியையும் அப்படி யெதிரேவரச்சொல் - பைசேக்கு கியா போல்தாஹே-சாமி புத்தி-எப்பவும் ஆனிமாசம் ஏரிக்குத்தண்ணி வரும் ஆண்டவனே- புரட்டாசிமாதத்தில் தண்ணிவந்தது காரைவி ளைச்சோம் முழுதும் போதேரிப்போச்சுதுசாமி மாப்புப்பண்ண வேணும் - அடிசெருப்பாலே நாயே அஜீடபேதார் (ஜீ) ஒமுரிதி யாங்கு ஒருவன் குடுமைமயிரைக் கழுதைவாலில் கட்டி ஊர்க்கோ லஞ்செய்வி மற்றொருவனைத்தொடையில்சூட்டுக்கோலால்சூடு (அச் சாமஹராஜ்.)

---

* ௲௮௱௬௰ஷு-௨௩-வது-ஆக்டினால் ரபித்துவார் திட்டப்படிக்கு சர்க்கார்தீர்வை பாக்கியைவசூல்செய்ய-௲௮௱௨௰ஷுத்து-௨௮-வது சட்டம்-௩-வது-பிரிவுஉபயோகப்படுமென்றேற்பாடாயிருக்கிறது.

---

* ௲௮௱௫௰ஷு அக்டோபர்மீ ௰௯௨ உத்தரவினால் சர்க்கார் பணம்வசூலுக்காகக் கிட்டிக்கோல் முதலானதுபோட்டுத் துன்பப் படுத்தக்கூடாதது துன்பப்படுத்துவதாகத்தெரிந்தால் மேல்ரனகோ ர்ட்டாருடைய விசாரணைக்கனுப்பவேண்டியமத்திய கண்டம் படோ வின்லையால் கோர்ட்டு மேற்படிஷு ஜூலைமீ ௨௩ நடவடிக்கை யைப்பார்த்தால் இவிசைநடப்பதின் யதார்த்தந்தெரியும்.

நகதிபாக்கிப் புள்ளிகளைகூப்பிடு, ஐயா வந்தாங்கோ அடேபி த்தனைபேரோடு யாரொழவுகொடுப்பார்கள் அந்த மணியக்காரனைக் கூப்பிடு என்னடாபோக்கிரி நகதி புள்ளிகளாலேயும் வசூல்செய்ய உன்னாலாகாதா, இந்தநாய்க்குமணியமா, சும்பப்பயலே - ஒய் ராயசக்காரரோ இந்தக்கையிலாகாத நாயிடத்தில் ஒருவாக்குமூலம் வாங்கும்-அர்ஜியெழுதும் - வாயிலே மண்ணைப் போடுகிறேன் - புத்திசாமி டபேதாரன், கெடுத்தகேடு வசூல் செய்வதற்குமுன்னே கொண்டுவந்துவிட்டான் இப்போ வசூல் பண்ணிப்போடுகிறேன் (கொண்டுபோ.)

தாசீல்தார் உத்தரவுப்பிரகாரம் தபேதாரன்

நடப்பிக்குப்போது தொப்பைக்கூத்தாடி தபேதாரனுக்குச்

சொல்-வசனம்.

ஐயோ, ஐயோ, இதென்ன அநியாயம், கவரன்மெண்டார் இந்தப்படி ஹிம்சைசெய்யவும் உத்தரவு செய்திருக்கிறார்களா * இரக்கமில்லையா, அகுதியைப்பிடித்துப் பகுதிக்கடிக்கிறீர்கள், எளியாரை வலியார் அடித்தால் வலியாரைத் தெய்வங்கேட்காதோ, சொருபத்தையறியாமல் நரகத்தில் விழலாமா, நீருள்ளமட்டுக்கும் மீன் துள்ளும் நீர்போனால் மீன் துள்ளுமா, தாசீல்தார் சொன்னபோதிலும் நீர் இந்தப்படி செய்யலாமோ, எட்டியோகூடி இலவுந்தீப் பட்டாற்போல் நீயும் ஏன் கெட்டுப்போகிறாய் (தபேதார்) அடேபோடாபோ தாசீல்தார் உத்தரவுப்பிரகாரம்நடக்கிறோம் இவங்கள் பூச்சிகளுக்குச்சமானந்தானே-தாசீல்தாரரிருக்கும்போது நமக்கென்னபயம் மலைமீதிலிருப்பர்ளைப் பன்றி பாய்வதுண்டோ, இருப்புத்தூணைச் செல்லெரிக்குமா, நாமென்னசெய்தாலுங் கேழ்க்கிறவர்களார் (தொ) மெய்தான் ஐயா மெய்தான், பயம்விட்டுச்சொல்லிக்கொள்ளுகிறவனிருந்தாலல்லவோ கேழ்க்கப்போகிறார்கள், ஊசிக்கண்ணால் ஆகாசம்பார்க்கக்கூடுமா, குடியானவனையென்னசெய்த போதிலும் அவன் ஊமைகண்ட கனவாக உள்ளடக்கிக்கொள்ளுகிறான், ஒருவேளை சொல்லிக்கொண்டாலும் ஏழைசொல் அம்பலம் ஏறுமோ, ஒருமுசல்குட்டி சிங்கத்தை யடிக்குமா, சரி சரி உம்முடையபுத்தியி லானமட்டும்பாரும்.

---

* ௲௮௱௬௰ ௵ ஜூன்மீ ௨௰௨ உத்தரவினால்ரிவினியூ உத்தியோகஸ்தர்களாவது போலீசு உத்தியோகஸ்தர்களாவது சித்திரவேதனை செய்ததாகவரும்பிராதுகளுக்கும் அதைக்குறித்துநடத்திய நடவடிக்கைகளுக்கும் நகல்கள் உடனேகவரன்மெண்டுக்கு அனுப்பக்கட்டளை.

பொது-விருத்தம்.

கிட்டியண்ணாந்தாள்போட்டுக்கிடக்கவேசெய்துகைகால்.........*
கட்டிவெய்யலில்நின்றுத்திக்காதுசவாரிசெய்யும்..................*
மட்டறும்இமிசையாலேவதைபடுங்குடிகள்நொந்து ...........*
கஷ்டநிஷ்டூரஞ்சொல்லிக்கலங்கியேபுலம்புவாரோ ..............*

வ ச ன ம்.

கிட்டிக்கோல் அண்ணாந்தாள் போடுதல் காலும் கையுங்கட்டி வெய்யலில் நிறுத்துதல் காதுசவாரிசெய்வித்தல்முதலாகியபலவித இமிசைகள்செய்யப்பட்டு வதைபடுகிற எளியகுடிகள் ஏங்கிதேங்கி முகம்வீங்கி அய்யன்மார்செய்கிற அநியாயங்களையெல்லாம் எடுத்துச்சொல்லிப் புலம்புகிறவிதங்காண்க.

குடிகள்புலம்புகிற-கண்ணி.

இராகம்-ஆகிரி-அடதாளசாப்பு.

சாவிக்குமேதீர்வை சரியாகப்போட்டுநீர் - ஐயமாரே-இப்போ
காவலிலேவைத்துக்கைக்குக்கிட்டிபோட்டீர் - ஐயமாரே

தரிசைஎங்களிட தலைமீதிலேகட்டி - ஐயமாரே- மாமூல்
வரிசைதரவில்லை யென்றுவதைக்கிறீர்- ஐயமாரே

*ஜாஸ்தியைப்பைசலில்தள்ளிக்கொடுப்பதாய்-ஐயமாரே - எங்கள்
ஆஸ்தியிலேபாதி அபகரித்தீர்களே-ஐயமாரே

கழிவுபைமாஷி கட்டையைத்தள்ளவே-ஐயமாரே-கொடுக்க
வழியில்லையென்றாலும்வாங்கினீர்பத்துப்பொன்ஐயமாரே

வெள்ளவாரிகம்மி மினஹா செய்விப்பதாய்- ஐயமாரே- எங்கள்
சொர்ணகுத்தாரியைக் கொள்ளையடித்தீரே- ஐயமாரே-

நீர்பிடிப்பின்தீர்வை நீக்குவிப்பதாக - ஐயமாரே - ஏதோ
ஓர்புரட்டுசெய்து உள்ளாய்க்கெடுத்தீரே- ஐயமாரே

மனைவரிதவிவரி வஜாசெய்விப்பதாய் - ஐயமாரே - அநு
தினமிப்படிசொல்லித் தின்றீர்வெகுபணம் - ஐயமாரே

---

* ௲௮௱௬௰ஹு ஜூலைமீ ௧௨ உத்தரவினால் கிணறுஎடுப்பதிற் செலவுஅதிகம் அல்லது குறைவென்கிறநிபத்தால் எந்தவகைக்கிணற்றுக்கும் அதிகதீர்வைபோடக்கூடாதென்றுகட்டளை.

தரங்கம்மிசெய்வதாய்த் தந்த்ரமாகப்பேசி - ஐயமாரே - பிழை
திரங்கொளவேஜாஸ்தி தீர்வைபோடுவித்தீர் - ஐயமாரே

தண்டுசரயமராவென்று ஆடுகோழி - ஐயமாரே- சும்மா
கொண்டுபோகித்தின்றீர்கொலைபாதகமல்லோ - ஐயமாரே

கிணற்றிற்காலிரடிக் கிழவன்விழுந்திறந்தால்-ஐயமாரே- எங்கள்
பணத்தைப்புறித்திடப்பயப்படும்படிசெய்தீர்-ஐயமாரே

எங்கள்வீடுவெந்தால் எங்களையேபிடித் - தையமாரே - மிகப்
பங்கமுறச்செய்து பறித்தீர்வெகுபணம்- ஐயமாரே

கலியாணஞ்சிமந்த மென்றுகடிதம்வர - ஐயமாரே- என்றும்
விலையொன்றும்வாங்காமல்வேண்தெல்லாந்தந்தோம்-ஐயமாரே

நோட்டவரியென்று நோகளங்களைப்பேசி - ஐயமாரே - மிக
வாட்டிமணியக்காரன் வாங்கிவருகிறான்-ஐயமாரே

சொல்லத்திருட்டுகள்குறவர்மறவர்செய்தால் - ஐயமாரே-அதைச்
சொல்லிக்கொண்டாலஞ்சத்தொகையென்னவென்கிறீர்-ஐயமாரே

அஞ்சாறுதலைமுறை யானவழக்கினை-ஐயமாரே - முப்
பஞ்சாயத்துத்தீர்ப்புப் பண்ணுவிக்கிறீரே-ஐயமாரே

கோர்ட்டுகுமுஸ்தா வுக்குவேணுமென்று-ஐயமாரே- எங்கள்
மாட்டுநெய்குடத்தில் வாங்கியனுப்புறீர்-ஐயமாரே

உங்கள்வீட்டிலொரு திதிமதிவந்திடில்-ஐயமாரே-உடனே
எங்கள்தோட்டஞ்சூறையிட்டுக்கொண்டுபோறீர்-ஐயமாரே

கனமாகநீர்செய்யும் கலியாணத்தில்நாங்கள்-ஐயமாரே- உமது
தனதுபெறமொய்யுந் தந்துவருகிறோம்-ஐயமாரே

இந்தப்படிநின்று எம்மைஎழைகளாக்கி-ஐயமாரே-கிஸ்திக்குத்
தொந்தரைசெய்தெம்மைத்தொங்கவிட்டீர்மரத்தில்-ஐயமாரே

கிட்டிக்கோலைமாட்டிக் கிணற்றில்தள்ளுகிறீர்-ஐயமாரே-இப்போ
தட்டுமுட்டுகள்விற்றுத்தருகிறோம்கிஸ்தியை - ஐயமாரே

பிள்ளைப்பூச்சிதொப்புளைப்பிடுங்குதுஐயோ - ஐயமாரே- எங்கள்
பிள்ளைகளைவிற்றுப் பெரியகிஸ்திதாறோம் - ஐயமாரே

குதிகாலில்கல்வைத்துக் குந்தச்சொல்லிஐயோ- ஐயமாரே - மிக
வதைக்கிறீர்கிஸ்திக்குமாட்டைவிற்றுதாறோம் - ஐயமாரே

கூட்டுக்கோலாலையோ குடிவுதைக்கிறீர் ஐயமாரே- எங்கள்
வீட்டையாகிலும்விற்றுவிளைவிற்கட்டுவோம்கிஸ்தி ஐயமாரே
முளகாய்த்தூளைஐயோ மூக்கிலேற்றவேண்டாம்-ஐயமாரே-ஊரில்
களவுசெய்தாகிலும் கட்டுகிறோம்கிஸ்தி - ஐயமாரே
எறும்புப்புற்றிலையோ இருக்கும்படிசெய்தீர் - ஐயமாரே - மீந்த
கரும்புத்தோட்டம்விற்றுக்கட்டுகிறோம்பணம் - ஐயமாரே

இராயசக்காரன்-குடிகளுக்குச்சொல்-வசனம்.

ஏன் அழுகிறீர்கள் - இந்நேரத்துக்குச் சத்தியாய் அகப்பட்டதைராயருக்குத்தந்துவிட்டுத்தப்பித்துக்கொண்டுபோங்கள் நமக்குத்தரப்பட்டமாமூலுந்தெரியுமே தாசில்தாரருடன் இன்னம் வாய்தாகொடுக்கும்படிசிபாரசுசெய்கிறேன்.

குடிகள்-வசனம்.

நல்லதையா-வாய்தாகொடுப்பியும்-நாங்கள்தரப்பட்டதைராயருக்குச்சேர்த்துவிடும் உமக்குத்தருகிறோம் நல்லது நாலு நாளைய் வாய்தாவுக்கு உத்தரவாச்சுது போய்வாருங்கள்.

பொது-விருத்தம்.

பிரமவாலயத்துத்தர்மப்பெரியதனக்காராகப் ... ...*
பருமைசேர்துரைத்தனத்துப்பிரபுகளுமிவளைவத்துத் .. *
தருமகாரியங்களுக்கேதரும்பணம்பாதிதின்னும் ... *
தருமகர்த்தாக்களென்னுங்கருமகர்த்தாக்கள்வந்தார் ...*

வசனம்.

தேவாலயங்களுடைய தருமங்களை நிறைவேற்றும்படி துரைத்தனத்தாரால் ஏற்படுத்தப்பட்டு அந்தத் தர்மத்துக்காக வரப்பட்ட வருமானங்களில் கைகொண்டமட்டுங்கொள்ளையடித்து தருமத்தைப்பாழாக்கிக்கொண்டுவருகிற தருமகர்த்தாக்களென்கிற கருமகர்த்தாக்கள் வருகிறவிதங்காண்க.

தருமகர்த்தாக்கள் வருகிற-தரு.

இராகம்-நாதநாமக்கிரியை- அடதாளசாப்பு.

பல்லவி.

தருமகர்த்தரிதோ வந்தார்- கோவில்
தருமகர்த்தரிதோ வந்தார் - அந்தத்
தருமத்தையழிக்கவே * யொருமித்தபேரென்னும் (தரு)

---

* ௺ அருகுவரு! மேஜீ உகவ உத்தரவினால்தேவஸ்தானம்லவுகிக ஸ்தானத்துக்குக் கொடுத்துவருவதைவிட ஒட்டுமொத்தமாய்வாங்கிக்கொள்ள மனதுள்ளபேர்களுக்குக் கொடுத்துவிடபோர்ட்டுக்குரிபோர்ட்டு அனுப்பக்கட்டளை.

அநுபல்லவி.

கோயிலுடைமைகள் தின்னும் - துஷ்டக்
கொடும்பாவிகளென்போ ரிவர்களேபின்னும்
வாயினல்நீதிகள் பன்னும் - கோயில்
வருமானங்களெல்லாம் விழுங்கவேயுன்னும் (தரு)

[சரணங்கள்.]

சருக்கரைப்பொங்கலை மழுக்க - இவர்
சம்பந்திமுதலான சகலருங்கொழுக்கக்
குருக்கள்வருமான மழிக்க - இவர்
கூத்திகள்மாத்திரங் கோவிலிற்செழிக்கத் (தரு)
சாதல்வார்கசருகள் மடுக்கத் - தொழில்
சம்பளந்தக்ஷணை களில்பாதிபிடிக்க
வேதபாரகர்சொத்தைக் கெடுக்க - அதை
வேசிக்குந்தாசில் தாரர்க்குங்கொடுக்கத் (தரு)
அலங்காரக்கட்டளை நீங்க - மறை
அறையும்விசேஷகட்டளையும்பின் வாங்கத்
துலங்குமுற்சவமெல்லாந் தூங்கச் - செய்து
தொகைபெற்றதங்கள் குடும்பத்தைதாங்கத் (தரு)

தருமகர்த்தாக்கள் தாசில்தாரரை வந்துகண்டு
தண்டம்போடும்போது அவர் தபேதாரனை விசாரிப்பதும்.

அதற்கவன் உத்தரவுசொல்வதும்-வசனம்.

(தா) அஜீதபேதார் - கோன்ஹயே ஒலோசாங்.

(டபே) ஜீ தேவல்கா தர்மகர்த்தாஹே.

(தா) எங்கேவந்தார்கள்.

(டபே) சம்பளத்துக்கு வந்தாங்கோசாமி.

தாசில்தார்-தர்மகர்த்தாக்களுக்குச்சொல்-வசனம்.

என்னடாணும் தர்மகர்த்தாக்களே அஞ்சுமாதத்திற்குப் பிற்பாடு சம்பளத்துக்குவந்தீர்கள் சிப்பந்திகள் சாப்பாட்டுக்கு கென்னசெய்கிருர்கள்.

தருமகர்த்தர்சொல்- வசனம்.

கிஸ்திவசூல் காரியத்திலிருந்ததினல் அட்டிநேரிட்டதுசாமி

அந்தச்சமயத்தில் தாசில்தாருக்கு தபேதார்சொல் வசனம்:

மகாராஜ்-சத்திரபதி - கிஸ்திபணங் குடிகளிடத்தில் வசூலாகாத போதுமாத்திரந்தான் இவர்கள் மூணுமாசத்துக்கொருதரம் சரியசப்வந்து கோவில் சிப்பந்திப்படித்தரத்தொகைவாங்கித் தங்களுடைய சொந்தக்கந்தாயத் தொகைக்காவது, தங்கள் இலாகாதாருடைய கந்தாயத்தொகைக்காவது பர்த்திசெய்துபோட்டுச் சிப்பந்திகள்கஞ்சிக்கில்லையென்றழுதால் தங்கள் சொந்தப் பணத்தைத் தீர்மே தங்களுடைய இலாகாதார் மூலமாய் - ரூ க - க்கு - பத்துக்குமொண்டாக வட்டிகட்டிச் சோளமுங் கம்புங்கொடுத்து லாபஞ்சம்பாரிக்கிறாங்கோ சாமி.

தாசில்தார் சொல்வசனம்:

சிப்பந்திகள் தங்களுடைய சம்பளத்தைக்குறித்து ஏன்கோர்ட்டுக்குப் போகிறதில்லை,

தபேதார் சொல்வசனம்.

மகாராஜ் - பத்து ரூபாய்க்கு உட்பட்ட வழக்குக் கிராமமுன்சிப்பிடத்தில் கொண்டுபோக வேணுமென்றால் இவரே கிராமமுன்சிப்பு - சொற்பத்தொகைக்குக் கோர்ட்டுக்குப்போறத்திலே ரொம்பொ செலவுபிடிக்குதுசாமி; அதல்லாமல் அவுங்கொ கோர்ட்டுக்குப்போனாக்கா இவுங்கோ அவுங்கமேலே யெதாவது சும்மாபுகாரா செய்வாங்கோ என்னு பயப்பட்டு இவுங்கொ சொன்னபடி கேட்டுகினு அவுங்கொ அடங்கிக்கிடக்கிறாங்கொ சாமி - ஒருவேளை ஆராவது துணிஞ்சித் தங்களிடத்தில்வந்து சொல்லிக் கொண்டாலும் தங்களுக்கு நிமித்தமில்லை யென்னு சொல்லித் தெருத் [illegible] றீங்கொ கயர்ஹாஜர் அபராதப்பிடிப்பு முண்டாகும் அதினால்தான் தர்புகர்த்தாக்கள் என்னசெய்தபோதிலும் சிப்பந்திகள் வெளிக்கு வாறதில்லை

தாசில்தார் சொல்வசனம்.

இதோரெண்டுபேர் நிற்கிறார்களே இவர்களார்.

தபேதார் சொல்வசனம்.

அஜரத்-இந்த பொம்மன் இருக்கிறானே இவன்தான்கோவில்குருக்கள், அதோஇருக்கிறானே அவன்தான் கோவில் மணியக்காரன் இவன்தான் கோவில்வரவுசெலவு கணக்குவைக்கிறான்சாமி.

தாசில்தார் மணியக்காரனுக்குச்சொல் வசனம்.

என்னஓய்மணியக்காரா, உங்கள் கோவில் நித்திய படித்தரம்-மார்ச்சுமீ-௩௪வரைக்கும் என்ன, (மணி) ௨௮௦-௪-௮ (தாசில்) சிப்பந்தித்தொகையென்ன: (மணி) ௫௬௦-௪-௦ (தாசில்) சாதல்வார் என்ன; (மணி) ௯௫௦-௪-௦ (தாசில்) மராமத்தென்ன: (மணி) ௫௰-௰-௬, (தாசில்) ரதஉற்சவத்துக்கு எவ்வளவு; (மணி) ௧௬௫௦-௧௬-௬- (தாசில்) குல்தொகை யென்ன, (மணி) ௪௨௨௪௦-௰௪-௬, (தாசில்) ஓய் மணியக்காரரே, ரதஉற்சவக் கணக்கு விபரம் வாசியும்;

மணியக்காரன் கணக்குவாசிக்கிறதும்,

அதற்குக்கோவில்குருக்கள் குறுக்குமறுக்குச்சொல்வதும்;

ரூ. அ. பை.

மணி-தேர்முகூர்த்தகாணிக்கை.......................௨ ,, ,,
குரு-தேர்முகூர்த்தகாணிக்கைசேர்ந்ததேயில்லை.

மணி-பட்டடைமுகூர்த்தகாணிக்கை.......................௧ ,, ,,
குரு- பட்டடைமுகூர்த்த காணிக்கை பறந்துபோச்சுது.

மணி-ஆயக்கால்காணிக்கை.......................௪ ,, ,,
குரு-ஆயக்கால்காணிக்கைக்கஞ்சேசாசு.

மணி-கிராமசாந்திச்செலவு.......................௫ ,, ,,
குரு-கிராமசாந்திச்செலவுகாராரோயல்ல.

மணி-துஜாரோகணச்செலவு.......................௧௦ ,, ,,
குரு- துஜாரோகணச்செலவு வஜாகொஞ்சம்வேணும்.

மணி-கலியாணஉற்சவச்செலவு.......................௧௦௦ ,, ,,
குரு- கலியாணஉற்சவச்செலவானது காப்பங்கோயாம்.

மணி-பால்தானம்.......................[illegible] ,, ,,
குரு-பால்தானம்பார்த்ததேயில்லை.

மணி-சோடசதானம்.......................௧௦௦ ,, ,,
குரு-சோடசதானம்சோர்ந்துபோச்சுது.

மணி-மண்டபக்கட்டளை..........................௩0 ,, ,,
குரு-மண்டபக்கட்டளையில்கொண்டதுபாதி.

மணி-பிராசுகட்டளை..........................௯ ,, ,,
குரு-பிராசுகட்டளைநிராசையாச்சு.

மணி-சுத்தபுண்ணியாகவாசனம்..........................௬ ,, ,,
குரு-சுத்தபுண்ணியாகவாசனம்அற்றேபோச்சு.

மணி-தஸ்திக்குளத்பாடு..........................௬௪ ,, ,,
குரு-தஸ்திக்குளத்பாடுசுஸ்தியாய்ப்போச்சு.

மணி-தேர்மராமத்..........................௭0 ,, ,,
குரு- தேர்மராமத்துப்பணம்
தேவடியாளுக்காச்சுது.

மணி-சசருபாபத்து..........................௫00 ,, ,,
குரு-சசருபாபத்துக்கொசுருக்குப்போச்சுது.

மணி-தண்ணீர்ப்பந்தல்செலவு..........................௪00 ,, ,,
குரு-தண்ணீர்ப்பந்தல்திண்ணைபோச்சுது.

மணி-பானகபூஜை..........................௨௫ ,, ,,
குரு-பானகபூஜை[illegible]ந்தோப்பில்நடக்கிறது.

மணி-தெப்பஉற்சவம்..........................௫00 ,, ,,
குரு-தெப்பஉற்சவம்அப்புறமில்லை.

மணி-வேடர்பறிச்செலவு..........................௫0 ,, ,,
குரு-வேடர்பறிச்செலவுமூடர்செலவுக்கேயாம்.

தாசில்தார் சொல் வசனம்.

ஏன்காணும் தர்மகர்த்தரே, இப்போது கோவில் குருக்கள் சொல்லுகிறதெல்லாம் எதார்த்தந்தானே.

தருமகர்த்தர் சொல் வசனம்.

இந்தக்குருக்கள் உண்டவீட்டிற்கு ரண்டகம்பண்ணுகிறவன் அகத்திலொன்றும் புறத்திலொன்றுஞ்செய்யுந் துர்க்குணன் கண் குற்றந் தன்னுக்குத் தெரியுமா, இவருடைய நடத்தை தங்களுக் கெப்போதிருந்திருக்கின்றது சாயங்காலமானால் சாராயக் கடைப்பண்டை காணலாம். கோவில் - செம்பு - தவலை - குடிலைசக்காரிவீடு சேர்ந்

நது ஒவ்வொரு சமயத்தில் மூலவிக்கிரஹத்துக்குத்தண்ணீர்காட்டாமல்தானே மூடினகதவு மூடினபடியேயிருக்க - திருவாசற்படிமீதும், பலிபீடத்தின்மீதும், தண்ணீர்தெளித்து வில்வப்பத்திரியைப்போட்டுவிட்டுப் போய்விடுகிறார். ஒவ்வொரு தினத்தில் சுவாமிநைவேத்தியத்துக்குக்கோவில் பிண்ணத்தில் ஒருதாம்புக்கயிற்றைவைத்துக் கையில்மணியெடுத்து ஆட்டிக்கொண்டுபோய் நைவேத்தியஞ்செய்கிறார். * யாராவது ஒருபுண்ணியவான் அபிஷேகஞ்செய்யச்சொன்னால் கர்ப்பக்கிரகத்துமாடத்தில் எண்ணெய்க்கலசமுதலாகியதுகளை வைத்துக்கொண்டிருந்து சுவாமிக்குமெய்யாகவே அபிஷேகஞ்செய்கிறவனைப்போலத்துணிமறைவுகட்டி எண்ணெய்முதலாகிய அபிஷேகச் சாமான்களைத்திருடுகிறது - சுவாமியினுடைய சாத்துபடிக்கு வரப்பட்ட புஷ்பங்களைச் சுவாமிக்குச் சாத்தினால்கசங்கிப்போகுமென்றெண்ணி அந்தப் புஷ்பங்களில்பாதியும், நைவேத்தியத்துக்கு முன்னமே பொங்கல்களில் கொஞ்சம் கூடுகையாகவும் தேவடியாள் வீட்டுக்கு முந்தலிலேதானே அனுப்பிவிடுகிறார். இப்படிப்பட்ட நடத்தையுள்ளவர்சொல்லுகிறதைத் தாங்கள் எப்படிநம்பலாம்.

குருக்கள்—சொல்வசனம்.

ஐயா, தர்மகர்த்தரே வாயை அடக்கும்கள்ளனுக்கு கூடவென்றவன் மேல்பகை - முடுக்கிலிருந்துகொண்டு துடிக்கிறீர் - அடுத்தாரைக்கெடுக்கிறீர் - தங்களுடையகாரியங்கள் வெளிப்படப்போகிறது - சுவாமி எசமான்களே இந்தத்தருமகர்த்தருடைய காரியங்களில் சிலதைத் தெரிவிக்கச் செலவுகேட்டுக்கொள்ளுகிறேன் ஒருநாள் கோவில் தீபத்துக்கு எண்ணெயில்லையென்று இவரைக் கேட்டபோது; இரவையும், பகலையும்படைத்தசோதிர்மயமாகியசுவாமிக்குப்பொழுதுபோனால் கண்தெரியாததுபோலும் நீவெளிச்சங்காட்டித் தெரிவிப்பதுபோலும் இருக்கிறது - போங்காணும் நாளைக்குப்பார்த்துக்கொள்ளலாமென்று சொன்னார் ஒருநாள் நைவேத்தியத்துக்கு அரிசிகொடுக்கச்சொல்லிக்கேட்டால் உலகத்துக்கெல்லாம் படியளக்கின்றகடவுளுக்கு நீ ஒரு பிடிசோறுகொண்டுபோய்க்கொட்டாவிட்டால்சுவாமி பட்டினி கிடந்து சாவாரோ போ

---

* ௲அசஉ-வது பிபர்வரியீ ருஉ, உத்தரவின்படி தேவஸ்தானங்களுக்குப் பூசைவகையரா இல்லாமல்போகிறவிஷயத்தில் இரண்டொருகடவைசொல்லி அதின்மேலும் பூஜைநடத்தாமற்போனால் மானியங்களை ஜப்திபண்ணிக்கொள்ளலாமெனக்கட்டளை.

டா பயித்தியக்காரா இது சுவாமியைப் பழிக்கிறதுபோல் இருக்கிறதேயென்று சொன்னார்.

ஒருநாள் இவர்கோவிலுக்குவந்து விக்கிரகப்பட்டி எடுத்துவரச்சொன்னார்; அதைப்பார்த்து அதன்படி ஐட்டிபார்த்துக்கொண்டுவரும்போது ஒருதர்மவான் பதிசாய்ப் பிரதிஷ்டை செய்வித்திருந்த விக்கினேசுர சிலாவிக்கிரகம் விசேஷமாயிருந்தது. இதுபட்டிக்கு விரோதமாயும்; முன்னோர் ஆகமவிதியை அனுசரித்து இன்னின்னமூர்த்திகள் இருக்கத்தக்கதாகவென்று செய்த ஏற்பாட்டுக்குவிரோதமாயுமிருப்பதால். இந்தக்கோவில் மூர்த்திகரத்துக்குப்பின்னம் நேரிட்டிருக்கிறதென்றுசொல்லி நாலுபேர் சாணாரை அழைப்பித்து மேல்சொல்லிய விக்கினேசுரனைப் பேர்ப்பித்துக்கொண்டுபோய்த் தமது வாசற்படிக்குப் போட்டுக்கொண்டு நடக்கிறார்

மற்றொருநாள் இவர் கோவிலுக்குவந்தபோது உற்சவருக்கு நாலுகை யிருப்பதைப்பார்த்து ஓய்குருக்களே, மனுஷனுக்கு இரண்டுகையிருக்கச் சுவாமிக்கு நாலுகை எங்கேயிருந்து வந்தது காணும், இது சரியல்லவென்று சொல்லி இரண்டு கன்னானை அழைப்பித்து இரண்டுகைகளைவாங்கித் தம்பலப்படிக்கம் சேர்ப்பித்துக்கொண்டார்;

பின்னொருநாள் கோவிலைச்சார்ந்த நந்தனவனத்துக்குவந்து தோட்டக்காரனைப்பார்த்து அடே தோட்டக்காரா முருங்கைமரம் அலரிச்செடி வெட்டிவைத்தால் துளிர்க்கிறதே - தென்னமரம்-மாமரம் - பலாமரம் - இதுகளை வெட்டிவைத்தால் ஏன் துளிர்க்காது தோட்டம் ஏன் பலக்காது என்று சொல்லிப் பலமாகிற தென்னமரம்-மாமரம்-பலாமரம்-முதலானதுகளைவெட்டி நடுவித்துத் தோட்டத்தைப்பாழாக்கினார்,

வேறொருநாள் காற்றுமழையில் விழுந்துபோன மதிற்சுவர் கட்டவேணுமென்று கேட்டுக்கொண்ட மாத்திரத்தில் பத்துப்பேர் சாணாரையும், பறையரையும்; விட்டுநாகதாளி முள்ளுகளைச் சுற்றிலும் நடும்படி செய்தார், கோவிலுக்கு இப்படிப்பட்ட மகாபுண்ணியவானாகிய தர்மகர்த்தா இருந்தால் அதுஎன்னமாய் விளங்கப்போகிறது,,

தவலைசொம்பு நானேதோ எடுத்துக்கொண்டுபோய்ச் சாராயக்கடையில் வைத்துவிட்டதாய்ச் சொல்லுகிறோ, நானப்படி வொ

ல்லும் செய்ததில்லை என்பது தங்களுக்கே தெரியும்-அண்டா-கொப்பரை-செப்புக்குடம்-முதலாகிய, பாத்திரச்சாமான்களெல்லாம் தங்களுடைய வீட்டில்வைத்துத்தாங்களே ஆண்டுகொண்டிருக்கிறீர்கள், இந்த ஒரு திருஷ்டாந்தத்தினாலேயே இவர் சொல்வதெல்லாம் அபத்தமென்று தெரியாதா,

சங்கராசாரியர் பூஜாவிதியின்படியும் ஆகமவிதிகளின்படியும் நாம் சக்திபூசை செய்கிறதுண்டு இதை ஏதோ ஒரு குறைவாகத் தருமகர்த்தர் சொல்லுகிறார்,

தருமகர்த்தர்சொல் வசனம்,

கூரைகொண்டைக்காக ஏரியுடைக்கலாமா; விடியளவும் மழை பெய்தாலும் ஓட்டாங்கிளிஞ்சில் கரைவதுண்டா; ஒரு சிறுமுள்ளு குத்தினால் மலைக்குநோகுமா இந்தக்குருக்கள் உழக்கிலே கிழக்கு மேற்குக்காட்டிஉறக்கிறான்-விரல் உரல்ஆனால் உரல் எப்படியாகாது நானோ நிலகாணிக்கைகளைப் பிராமணாளுக்குக் கொடுத்ததே யில்லையென்று இந்தக்குருக்கள் சொல்லுகிறான் அதை யெல்லாஞ் சேர்த்துத்தான் தங்கள்வீட்டுப்பரிசாரகனுக்கும், சுயம்பாகிக்கும்; தங்களால்சிபாரசுசெய்யப்பட்ட ஆசாரியாருக்கும், தங்கள்உத்தரவுபடிக்குக்கொடுத்திருக்கிறேன் அது சித்தத்துக்குத்தெரிந்தே யிருக்கிறது, எப்படியாவது பிராமணாளுக்குக்கொடுத்திருக்கிறேனே தவிர மற்றப்படிக்கு வேறொன்றில்லை -- தங்களுக்கு மாமூல்பிரகாரம்- சந்தனக்கட்டை - பூணூல் - சாதல்வர் - மராமத்து-கசர்பர்பத்துத்தொகைகளும், பிரம உற்சவத்துக்காகக் கொடுக்கப்பட்டதொகையில் மிஞ்சுவதும், நித்தியகட்டளையில் மிகுதியும், கொடுக்கப்பட்டுவருகிறது-அந்தப்படி அதைப்புரட்டித் தப்புக்கணக்குஎழுதுவித்தால்தானே தங்களிஷ்டப்படி நடந்துகொள்ள அனுகூலப்படும். தங்களுக்குத் தெரியாததொன்றுமில்லை எப்படியிருந்தாலும் காப்பாற்றிக்கொண்டுவரவேண்டியது தங்களுடையபாரம்:

தாசில்தார் தருமகர்த்தாவுக்குங் குருக்களுக்குஞ்
சொல்-வசனம்.

ஓய் குருக்களே, தருமகர்த்தரே, இதுகளையெல்லாம் வெளியில் சொல்லிக்கொள்ளாதேயுங்கள் நீங்கள்ஒருவர்க்கொருவர் ஒத்து நடந்துகொள்ளுங்கள் போய்வாருங்கள்.

[illegible]பைக்கூத்தாடி-சபையில்-சொல்வசனம்,

தெம்ஸ்டாளுந் துரைத்தனத்தார் அந்நிய மதஸ்தரா யிருந்த போதிலும் நீதிமான்களாகையால் இன்னமும் நமதுதேவாலயங்

கள்ளருக்குச் செவ்வையாகவேகொடுத்து நடப்பித்து வருகிறார்கள் அப்படியிருக்க நெற்றியில் திருநாமமும் விபூதியும் தரித்தது இத்தவென்று வெளிப்பட்டிருக்கிறது இந்தத் தாசில்தாரும் தரும கர்த்தராய்நின்னுகிறது. வெளியாகுதே இவர்களை எந்தமதஸ்தரென்று சொல்லவேண்டியது, இவர்கள் வழக்கோரஞ் சொல்பவரும் நேர்க்கீன்பொருளைச் சொந்தமென்பவரும் அருதிகளைக் கொல்பவரும் உறவாயிருந்துகொண்டே மறைவாய்க் கெடுக்க வகைகள் தேடுவோரும் போகிறகதியில்தானே போவார்கள், இவர்கள்கையில் தேவாலயங்களின் தருமத்தை யொப்பித்தது ஓமலிண்டத்தமுலைத நாய்க்குமுன் வைத்ததுபோலாச்சுது.

பொதுவிருத்தம்.

எல்லாத்தந்திரமுங்கற்றஇங்கிலிஷ்துரைத்தனத்தார்..................
ஜில்லாக்கள்நாசஞ்செய்யுந்திருடரைத்தடுக்குந்தந்திரம்..................
கல்லர்மலிருப்பதாலேகருத்திலோர்பயமில்லாமல்..................
பொல்லாங்குபுரிதீவர்த்திக்கள்ளரும்புறப்பட்டாரோ..................

வசனம்;

சகலதந்திரங்களுமறிந்த இங்கிலிசு துரைத்தனத்தார் இப்போது கள்ளர்கள் கும்புகூடி நிர்ப்பயமாகத் தீவர்த்தி-கத்தி-துபாக்கி-வளைதடி-பாணுத்தடி-கவண்கல்-இவைகளோடு பிரவேசித்துக் கதவைப்பிளந்து உள்ளேநுழைந்து வீட்டுஜனங்களைத் தலையையுடைத்தும்; காதணிகளுக்காகக் காதுகளை யறுத்தும்; காப்புக்காகக் கைகளை வெட்டியும்; பந்தத்தினால் சுட்டுப்பொசிக்கியும், ஸ்திரீஜனங்களை மானபங்கஞ்செய்தும், மற்றும் நானாவித கோரங்களைச் செய்து சொத்தையெல்லாங் கொள்ளையடித்துப்போகிற கொடியபாதகர்களாகிய திருடரை அடக்கும்படியான தந்திரமாத்திரந்தேடி பதியாமலிருப்பதை நன்றாயறிந்திருக்கிற தீவர்த்தித்திருடர் வருகிற விதங்காண்க;

தரு-இ-ப்·தன்னியாசி-தாளம்-ரூபகம்,

பல்லவி,

திருடர்தாங்களே-தீவர்த்தித்-திருடர்தாங்களே,

அநுபல்லவி.

இருதயத்தி.............இரக்கமில்லாத
பொருளுங்கொலைகள்தனிற்பொல்லாத(திரு)

[சரணங்கள்,]

முரத்திற்கருஞ்செம்புள்ளி.....................நீட்டி
முனையுளகட்டாரி ......... ... ............நட்டி
மிகப்பெரியதுப்பாக்கி.......................நீட்டி
வெறுளஆரவாரங்........................காட்டி
ஜகமதில்ஜனங்கண்டு ..... ..... ......குழையப்
பருமபுழைக்கடைவழியில்.........நுழையத்(திரு)

வீட்டெஜமானைப்பிடித்து...... .....வதைப்போம்
வெட்டிக்கட்டிக்குத்திச்...........சதைப்போம்
ஆட்டியைப்பாட்டியைக்கெடுக்கப்பதைப்போம்
ஆரெதிர்த்தாலும்எட்டி...... ...புதைப்போம்
நாட்டிலுள்ளோர்நம்மைக்... ... கண்டுநடுங்கக்
காட்டில்வழிகட்டிப்பொருளைப் - ... பிடுங்கத்(திரு)

அகப்பட்டுக்கொண்டா............லாயிரமெடுத்து
அவனுக்குமிவனுக்குங்... ......... கொடுத்துப்
பகைபடாமலெல்லாவாயு...... ... ......மடுத்துப்
பத்தேகாணுகாயல்...............தன்னைவிடுத்துச்
சகசமாய்வந்து ...... ...... ...சாட்சிசொல்லும்
பகைவனைத்தேடப் ... ...பதுங்கிக்கொல்லும்(திரு)

தீம்-தீம்-உர்ரு-உர்ரு,

திருடர்திருடும்போது ஒருவர்க்கொருவர்
மாறிமாறித் துள்ளியெழும்பி
எமகிங்கரர்போலத்தொனிஎழும்பப் பேசுகையில்
முண்டைக்கண்முனியன்

கடாமுகக்கறுப்பனுக்குச்சொல்-வஞ்சித்துறை,

அடகடாமுகக்கறுப்பா ................❋
உடையடாகதவையிப்போ...............❋
பிடியடாசெட்டிகாலை... ... ........❋
ஓடியடாவிடியுமுன்னே... ... ......❋

கடாமுகக்கறுப்பன்-முண்டைக்கண் முனியனுக்குச்
சொல்-வஞ்சித்துறை.

முண்டைக்கண்முனியாசெட்டி... ...❋
பெண்டுபிள்ளைகளையெல்லாம் ...,...❋

கண்டகோடாலிகொண்டு ........... *
துண்டதுண்டங்களாக்கே ........... *

பொதிவயிற்றுப்பொன்னன்
நெட்டைக்கால்வீரனுக்குச் சொல்
வஞ்சிவிருத்தம்.

நெட்டைக்கால்வீராவொக்கப் ... ... *
பெட்டியையுடைத்திப்போசோ ... ...*
முட்டிவைப்பந்தத்தாலே ... ... ...*
சுட்டுக்கேள்புதைகாட்டென்றே ... ... *

நெட்டைக்கால்வீரன்
பொதிவயிற்றுப்பொன்னனுக்குச்சொல்

வஞ்சிவிருத்தம்.

பொதிவயிற்றுப்பொன்னுகேள் ... ... *
மதியிலாச்செட்டிதலீனப் ... ... ...*
புதையலைக்காட்டென்றேநான் ... ... *
வதைசெய்யக்காட்டினனே ... ... ...*

திருடர் திருடிக்கொண்டு ஓடிப்போகும்போது
ஒருவர்க்கொருவர்சொல்-வசனம்.

அடாதம்பிமாரே ஊரார்சேர்ந்து நம்மைப் பிடிக்கவருகிறார்கள்-கிழக்கேபோகிறதாகவழிகாட்டி மேற்கேயாவது திக்குக் கொருவராகவாவது ஓடிப்போவோம் - நாளை நம்மிடத்தில் பங்குவாங்கப் போகிற தலையாரியும் வெலையனும் கிழக்கேதாரிகாட்டுவார்கள்- ஜனங்கள் வராதிருக்கும்படி நாம்போட்டிருக்கிற முள்ளுவழிகளை விட்டுக் கள்ளுவழியில்நடவுங்கடா.

கொள்ளையுடைமைகளை இருபதுபங்காக்கி ஒருபங்கு வீட்டுளைவாளிக்கும், ஒருபங்கு ஊர்த்தலையாரி வலையருக்குப், இரண்டுபங்கு கச்சேரிசபார்செல்வுக்குப், ஒருபங்கு நம்முடைய சிநேகிதனுகிய சாராயக்கடைக்காரனுக்கும், ஒருபங்கு கள்ளுக்கடைக்காரனுக்கும், ஒருபங்கு கோமுட்டிக்கும், ஒருபங்குதட்டானுக்கும், ஒருபங்கு கிராமத்தாருக்கும், ஒருபங்கு கிராமதேவதைக்கும், ஒருபங்கு வேசிகளுக்கும், இரண்டுபங்கு சர்கமேசசம்சாரதாருக்கும், எடுத்துவைத்துப் போட்டு மற்றதை நாம் எல்லோரும் பங்கிட்டுக் கொள்ளவேண்டும்

ஆனால் பங்குவந்தசொத்தைச் சொந்தவீட்டில்கொண்டுபோய் வை க்கவேண்டாம்,

சிலநாள்வரைக்கும் கல்லாங்குத்திலும், காட்டிலும், மேட்டி லும்கொண்டுபோய் மறைத்துவைக்கவேண்டும் ஒருவேளை யாராவ து நம்மைப்பிடித்து இம்சைசெய்தாலும் வெளிப்படுத்தலொண்ணா து அப்படிதான் அகப்பட்டு மண்ணுக்குப்போட்டாலும் பந்தே சாலுவிலுண்டாயிருக்கிற சவுக்கியம் நம்மிடவீட்டிலொருபோதுங் கிடையாது படுக்க நல்லகாற்றுள்ள பரிசுத்தமான இடமுண்டு-வே ளைதப்பாமல் ஆட்டுக்கறியுடன் சாப்பாடு-வாரந்தப்பாமல் தலைமுழு க்கு இவ்விதசவுக்கியமெல்லாமுண்டாயிருக்கிறது வாங்கடாவாங்கோ உரோ உர் உரோ உர்,

தபேதாரன்-தாசில்தாருக்குச்சொல்-வஞ்சிவிருத்தம்.

துஷ்டமஷால்சோரிக்குள் ... ... ...*
சட்டத்தின்படிகிராமஸ்தர் ... ... ...*
விட்டவிண்ணப்பங்கொண்டு ... ... *
வெட்டியான்வந்தானையா... ... ... ...*

வசனம்,

மஷால்சோரி நடந்ததாகக் கிராமஸ்தர் சட்டப்படிக்குளழுதிய ரிபோர்ட்டுடனே ஒருவெட்டியான்வந்தான் மகாராஜ்,

தாசில்தாரர்-ராயசக்காரனுக்குச்சொல்- வசனம்.

ராயசக்காரரே கிராமஸ்தரெழுதியனுப்பியவிண்ணப்பத்தைச் சனுமணிசெய்யும்,

ராயசக்காரன்விண்ணப்பத்தை வாசிக்கிறவிதம்,

ட-ா-ா- போலீசு ஆபீசவர்களுடைய சந்நிதானங்களுக்கு அ டியேன் அமராபதி கிராமபோலீசு ஆறுமுககவுண்டன்செய்யும் அ றிக்கை என்னவென்றால்-நேற்றியதினம் இராத்திரி பதினைந்துநாழி கைவேளையில் துபாக்கிமுதலான ஆயுதங்களுடன் சுமார் நாற்பது பேர் கும்பல்கூடிப் பந்தங்களைப்பிடித்துக்கொண்டு மாபாவி செட் டி என்கிற கோமுட்டிவீட்டுத்தெருக்கதவைச் செக்குலக்கையால் உ டைத்து உள்ளேநுழைந்து மேற்படிவாதியை அநேகவிதத் துன்ப ப்படுத்தி ஸ்திரீஜனங்களை மானபங்கஞ்செய்து அவனுடைய அறை வீட்டில் புதைத்துவைத்திருந்த ரொக்கம்,நகைவகையராசுமார்ரூபா (ஸ௩) பெறும்மான சொத்துகளைக்கொள்ளையிட்டுப் போகுங்காலத்தி

ல்-இவ்வீட்டுக்கெதிர்வீட்டிற் குடியிருக்கும் வீரபத்திர செட்டியால் தெரிந்துகொண்டு நானும் சானிமணியக்காரனும்-கணக்கனும்-தோட்டி-தண்டல்-குறவர்-வலையர்-ஊர்க்குடிகளோடுசேர்ந்து திருடர்தாரையின்மீதுபோகும்போது சுமார் இருபதுமயில்தூரமுள்ள திசர் அனுதிபுரிதாலூக் அரியரகிராமத்துக்குச் சமீபத்தில் மேற்படி திருடர் தாரையின்மீது போனோம் இதற்குள்ளாகப் பொழுதுவிடிந்தபடியால் மாடுகால்நடைகளின் நடப்பினால்-தாரைகாணப் படவில்லை-அந்தக்கிராமத்து-முன்சிபு-மணியக்காரன்-பட்டிகாவல் வலையனையும்-மேற்படி திருடரின்தாரையை முன்னுக்குக்காட்டும்படி கேட்டதற்குத் தாரைகாட்டாமல் உடாயித்துவிட்டார்கள்-சித்த மறியவேண்டியது,

பொதுவிருத்தம்;

வட்டிக்குவட்டிவாங்குமாபாவியெனுங்கோமுட்டி ... ... ...*
செட்டிதன்வீட்டில்நூறதீவர்த்தித்திருடரோடி ... ... *
வெட்டிவேதனைகள்செய்துவெகுபொருள்கொண்டுபோகச் ... *
சட்டத்தின்படிநடக்கத்தாசில்தாரும்வந்தாரே ... ... *

பொது வசனம்,

பேராசையினால் அநியாயமாக வட்டிக்கு வட்டி வாங்கிப்பொருளைப் பெருக்குமாபாவியென்னும் பெயருடைய கோமுட்டிசெட்டிவீட்டில் நூறுபேர் தீவர்த்தித்திருடர்புகுந்து அவனையும் அவனிட குடும்ப ஜனங்களையும் வெட்டிச்சுட்டு இம்சைசெய்து அநியாயப்பொருள் அனைத்தையும் அக்கள்ளர்கொண்டுபோக அதைக்குறித்துச் சட்டப்படி சரியாய்விஜாரித்து நீதிசெலுத்தத் தாசில்தார்வந்த விதங்காண்க.

கோமுட்டிக்குத் தாசில்தார்சொல்-விருத்தம்-

கொள்ளைநான்கொடுத்தேனென்னுங்கோமுட்டிசெட்டியேகேள் *
கள்ளர்கள்கொண்டுபோனகளவுச்சொத்திதுதானென்று... ... ...*
உள்ளதுசொல்லில்நாங்களுதவிசெய்வதற்குநீவாய் ... ... ...*
விள்ளுமுக்கணத்தில்சொத்தைவெளிப்படுத்திடுவோம்பாராய்... ...*

வசனம்.

உற்றதுசொன்னால் அற்றதுபொருந்தும்- ஓ கோமுட்டிசெட்டி உன்வீட்டில் கொள்ளைபோனதாகச்சொல்லப்பட்ட சொத்துக்களைக்குறித்து யதார்த்தமான ஜாப்தா எழுதிவைத்து நீ நடந்துகொள்ளவேண்டிய மரியாதைப்பிரகாரம் நடந்துகொள்வையேயாகில் களவுபோனசொத்தில் சற்றேறக்குறைய எல்லாகிடைக்கும்படி சாவு

விதமுயற்சியுஞ்செய்து பத்தாவைப்பிடித்துத்தருகிறோம் நீமுக்கிய மாயிதை அறிந்துகொள்ளவேண்டும்,

நேரிசை ஆசிரியப்பா.

இராகம்—எதுகுலகாம்போதி.

இந்தவூரினில் இருபதுவருஷமென்
தந்தையும்நானுஞ் சாக்குளமண்டிவைத்
திருக்குங்காலை இதனையறிந்து
செருக்குளகுறவர் மறவர்சேர்ந்து
திசைதொறுஞ்சென்று திவர்த்திக்கொள்ளை
வசையறஅடித்து வந்தவச்சொத்தை
இரகசியமாக என்னிடஞ்சேர்க்க
விரகுமுறைநிறை விளக்கமேயிலாமல்
கள்ளருமெம்முடன் கைசேர்ந்திருந்த
துள்ளத்தட்டானுங் கூடிமறைவில்
நகையெலாமுருக்கி நல்லுருமாற்றித்
தொகையிதுதான்கொடுப் பேனெனச்சொல்லிக்
கொடுத்ததைவாங்கிக் கொண்டுபோகி
அடுத்தடுத்திவ்வித மாகநடத்தின
அக்கள்ளர்தாமே யாலோசித்திவ்
வக்கிரமஞ்செய்தன ரன்றிராத்திரியில்
செக்காடுலக்கை தேடிக்கொணர்ந்தே
அக்காதகரொன் ணகக்கதவுடைத்துத்
திமிதிமென்றுள்ளே திடுக்கிடநுழைந்து
எமகிங்கரர்போ லெம்மைப்பிடித்து
என்னைத்துணியை என்விரல்களுக்கு
எண்ணநச்சுற்றி யிடர்தரக்கொளுத்திப்
பந்தத்தினாலே பதைக்கவேசுட்டு
எந்தமையிவ்வித இம்சைகள்செய்து
வைப்புச்செப்பு வகையெலாங்காட்டென
வெப்புறவெதுப்பும் வேதனைசகிக்க
மாட்டாமற்றானே மறைத்துவைத்திருந்து
காட்டாததனமெலாங் காட்டிக்கைகூப்பிக்
காக்கவேவேண்டும் கதிநீயாம்
பாக்கியொன்றில்லை பார்த்திடுமெனவும்

ஜடைப்பில்லைகுப்பிக்குச்சுத்தாழ்ம்பூ ... ... ... *
ஜடைசிங்காரஞ் சந்திரபிறையும் ... ... ... ... *
காதுக்கொப்புங் கண்டசரமும் ... ... ... ... *
கோதுமைமணியும் கொப்புஜம்பனும் ... ... ... *
கடகமணியிலாக் காப்புமோதிரம் ... ... ... *
படர்தரும்பாஜி பந்துகடுக்கன் ... ... ... ... *
வங்கிபசும்பொன் வளையல்தோடாவும் ... ... ... *
தங்கக்கட்டியும் தண்டையுங்காப்பும் ... ... *
அட்டிகைபீலி யரைஞாண்பாவலி ... ... ... *
ஒட்டியாணமும் ஒலைசரமும் ... ... ... ... ... *
சந்திரமுருகு ராக்கடைஜம்புல் ... ... ... ... *
பவழத்தாழ்வடம் பாடகம்பாட்டில் ... ... ... *
நவமணிமாலை நத்துமூக்குத்தியாம் ... ... ... *
பூணிலையாயிரம் புனை தாசிலாயிரம் ... ... ... *
நர்ணயங்களிலே நாலாயிரமுடன் ... ... ... ... *
ஆகப்பதினாயிரமவர்கொள்ளைகொண் ... ... ... *
டேகினரிதற்குநீ ரிட்டகட்டளைப்படி ... ... ... *
நடந்துகொள் நன்றி யறிவேன் ... ... ... ... *
உடந்தையாயிருந் துதவிசெய்வீரோ ... ... ... *

கெள்ளைகொடுத்தகோமுட்டிக்குத்

தாசில்தார்தயிரியஞ்சொல்

கழிநெடில் ஆசிரியவிருத்தம்,

உனக்குநானேதுந லுபாயங்களென்னவெனில் ... ... *
உன்வீட்டிலேயிருக்கும் ... ... ... ... *
ஓட்டையாந்தட்டுமுட்டுகளையுங்கந்தையையும் ... ... *
உன்னாள்கள்கையிலீந்து ... ... ... .. *
தனக்குவையலுடையபல செட்டிகோமுட்டிகள் ... ... *
தங்குமவரவர்மனைகளில் ... ... ... ... *
சற்றுமறியாமற்புகுந்துகொட்டத்திலும் ... ... .. *
தாழ்வாரகூரைகளிலும் ... ... ... *
மனக்கவலைகொள்ளாமல் மறைவாகவேவைத்து ... ... *
வந்ததையுரைத்தவுடனே ... ... ... ... *
மற்றவர்க்குறவர்கள்பறைய ரியர்களைப்பின்கட்டு ... ... *
மாருப்பிணித்தேகியே ... ... ... ... *

எனக்குறைவினுச்சுஞ்சு மேவோருக்குளிவர்களாற் ... ... *
காட்டப்படும்பேர்களைக் ... ... ... ... *
சவலைபடையச்செய் தனேததனமவர்கையில் ... ... *
சழுந்திநாய்கொளலாகுமே ... ..... ... *

வசனம்.

ஓப்பிசெட்டி ஊருக்குப்பால்வார்த்துன்பதா உடம்புக்குப் பால்வார்த்துன்பதா-காரியம் பெரியதேயொழிய வீரியம் பெரிதல்ல- உனக்கு எந்தவிதத்திலாவது போனசொத்துக்கொஞ்சமேறக்குறையச் சளுவிற்கிடைத்தாற்போதுமல்லவா,

ஆகையால் உன்வீட்டில் கள்ளர்கொண்டுபோனதுபோக மீந்திருக்கிற சிலநகைகளையும் ஒட்டை-உடைச்சல்களையும், நம்பிக்கையுள்ள உன்சொந்த ஆள்கள் கையிற்கொடுத்துக் கொஞ்சம்பணக்காரராயிருக்கிற-செட்டிகள்-கோமுட்டிகள்-ரொட்டிகள்-கவுண்டன்மார் முதலிமார்-இவர்கள்வீட்டுக் கொட்டத்திலாவது, தாழ்வார இறவாணங்களிலாவது, வைக்கோற்போரிலாவது கொண்டுபொய் ஒவ்வொன்றாகத்தெரியாமல் நுழைத்துவிட்டு அந்தச்சேதி நமக்குத் தெரிவித்தால் -குறவர்-மறவர்-பள்ளர்-வலையர்இவர்களிலசிலரைப்பிடித்துப் பின்கட்டுமாராகக் கட்டிக்கொண்டுபோய் இன்னானின்னா னிடத்தில் இன்ன இன்னசொத்துக்கொடுத்தோமென்றுமேற்சொல்லிய செட்டிவகையராக்களைக்காட்டச்சொல்லிப்போதித்து, அவர்களந்தப்படி காண்பிக்க அவர்கள்வீட்டைச்சோதனைசெய்வித்து உன் மனுஷனால் வைக்கப்பட்டிருந்த மச்சத்தைக்கண்டுபிடித்தமாத்திரத்தில் அந்தச் செட்டிவகையராக்கள் நடுநடுங்கித் திகிலடைந்து மானத்துக்கஞ்சிக் கேட்டதைக் கொடுத்துவிடுவார்கள்- அதினால் உனக்குமெனக்கும்லாபம் உண்டாகும்-அந்தப்படிகொடுத்தவனைத் தப்புவிக்கிறதற்கும் சில உபாயங்களுண்டு அது உனக்குத்தெரியாது இதற்கென்னசொல்லுகிறாய்சொல்.

கொள்ளைகொடுத்தகோமுட்டி தாசில்தாருக்குச் சொல்

கொச்சகக்கலிப்பா,

எப்படியாகிலுமெனக்கியான் இழந்தபொருள்வந்துவிடில்........*
இப்புகழைத்தேடுவதேன் துரைகள்முன்னேபோகுவதேன்.........*
தப்பிதங்கள்வாராமல் தாங்களேதயைசெய்து.......................*
செப்புமுறைப்படிநடக்கச்சித்தமாயிருப்பேனே.....................*

வசனம்.

ஐயா மண்பூனையானாலும் எலிபிடிக்கிறதுதான்காரியம், போனசொத்துக்கிடைத்தாற்போதும், தாளைபிடித்துக்கொண்டும், துப்புப்பிடித்துக்கொண்டும், திரிந்து நாலுமாசம் அஞ்சுமாசம் கிரிமினல் கோர்ட்டுக்கும்; செசன்கோர்ட்டுக்கும், அந்தக்கோர்ட்டு உத்தியோகஸ்தாளிடத்திற்கும் இருக்கிறசொத்தைச் செலவு செய்துகொண்டு வீட்டைவாசலைவிட்டுக் காலொடிய ஓடியலைவதினால் என்னபிரயோசனம்-கைதிகள் மேற்படி உத்தியோகஸ்தர்களுக்கு என்னைவிடச்செவ்வையாய் நடந்துகொள்வார்களாகில் துரைகளுக்கே தோதப்புத்துபாசித்தனஞ்செய்து விடுதலைசெய்துபோடப்போகிறார்கள்- அப்போது நமக்கு இளிச்சவாய்ப்பட்டங்கிடைக்கிறது-அதைவிட என் வீட்டில் ஒருசொத்தும்போகவில்லை வந்ததிருடர் அரவங்கண்டு ஓடிப்போய்விட்டார்கள் எங்களுக்கொருபிராது மில்லையென்று சொல்வது உத்தமம்-கள்ளன்புகுந்த மூன்றாம்நாள் கதவுக்குக்கரணம்போட்டதென்றாற்போலக் கள்ளர்கொண்டுபோனது ஒருபங்கு கைக்கூலிவாங்குகிறவர்களுக்கு இரண்டுபங்காகின்றது-இப்போது தாங்கள் ஏதோ ஒரு உபாயஞ்சொல்லுகிறீர்களே அதில் நமக்குப்பின்னாலே ஒருதொந்தரவும் வராதிருக்கிறபக்ஷத்தில் தாங்கள்செய்விக்கிறது சம்மதந்தான்-ஆனால் கிணறுவெட்டப் பூதம்புறப்பட்டாற்போலே டாமேஜ்-வழக்குப்புறப்படப்போகிறது-அவ்விஷயத்தில் தங்களிஷ்டப்படி நடந்துகொள்ளச் சித்தமாயிருக்கிறேன்.

தாசில்தார்-தபேதாரனுக்குச்சொல்- விருத்தம்.

ஆடாதப்பேதாரா அட்டியில்லாமலிப்போ ... ... ... ...*
பாரடாகள்ளர்தானை பத்தாவும்பிடிக்கவேண்டும் ... ... ... *
தேடாசிலனைக்கட்டிச் சித்திரவதைபுரிந்தே ... ... ... ...*
ஓடா இதில்நீசெய்யும் உபாயங்களெல்லாந்தானே ... ... *

வசனம்.

எள்ளென்னுமுன்னே எண்ணெயாய்ச்செய்துவரும் அஜீதபேதார் ஆலசியஞ்செய்யாமல் சாக்கிரதையாக நீ தோட்டி - தலையாரி - காவற்காரன் முதலாகியபேர்களை அழைத்துக்கொண்டு கள்ளருடையதாணை பிடித்துப்போய்ப் பார்ப்பதுமல்லாமல் - பத்தா - துப்பு-மச்சங்களுங் கண்டுபிடிக்கவேண்டும், முக்கியமாய்ப் பிரியாதிக்கு யார்பேரில் அநுமானமுண்டாயிருக்கிறதோ அவர்களையும், அன்றுஇராத்திரி தீவர்த்திவெளிச்சத்தில் யானை அடையாளம்பிடித்ததாகச் சொல்லுகிறானே அவர்களையும், பந்தேகானாவில் மண்ணெடுத்து விடுதலையாகி வந்திருக்கிற பழைய ஆசாமிகளையும், சற்றுப்பக்கங்களி வி

ருக்கின்ற - வலையர்-குறவர்-மறவர்-கள்ளர்-ஒட்டர்- லம்பாடிகள் இவ ர்களில் அனுமானமுள்ள பேர்களையும்பிடித்து நாம் வழக்கமாய்ச் செய்துவருகிற பலவிதமான இம்சைகளைச்செய்து கேட்பதுமல்லா மல்; பத்தா பிடிக்கிற அல்லது ஒருவனை மாட்டுவிக்கிற, விதங்களெல் லா மறிந்திருப்பாயல்லவா-அந்தப்படியுஞ் செய்யவேண்டிய தெல் லாஞ்செய் ஜல்தி;

பொதுவிருத்தம்.

கொள்ளையிற்கொள்ளையாடுங் கொடியனுந்தப்பேதாரன்..........*
கள்ளரிலொருவன்கையைக் கட்டிபேபிடித்துக்கொண்டு ..........*
வெள்ளவேசிலபேர்கையிற்கொடுத்ததாய்ச்சொல்லச்சொல்லி ...*
துள்ளசில அடித்துவீதி சுற்றியேவருகின்றானே ......................*

வசனம்,

கொள்ளையிலே கொள்ளை யிடுதாவென்கிற எண்ணுகிற தபே தாரனுக்கு முன்னமே கள்ளரின்னாரென்று தெரிந்திருப்பதால் அவ ர்களிலொருவனைப் பிடித்துக் குட்டைபோட்டுப் பின்கட்டு மாருக க்கட்டிக்கொண்டு * அடாவூரிலிருக்கிற இன்னசெட்டி இன்னபொட் டி இன்ன கவுண்டன்கையில் இன்ன இன்னநகைகள் கொடுத்தேனெ ன்பதாகச்சொல்லடாவென்று போதித்து அவர்களைக் காட்டச்சொ ல்லித் துள்ளத்துள்ள அடித்து வீதிகள்தோறும் இழுத்துக்கொண்டு வருகிறவிதக்காண்க,

தரு-இராகம்-புன்னாகவாளி-அடதாள சாப்பு,

(தபே) ஹத்தேரிபாண்சோது நடடா - நகை
யார்க்குக்கொடுத்தாய்வாங்கிக் கொடடா
சுத்தாதே உன்னிட கைகா லொடிக்கிறேன்
பத்தாவிலேயல திருட்டைப் பிடிக்கிறேன் (ஹத்தே)

---

* ௲அஉ௰௯ மார்ச்சிமீ உச-பவுஜ்தாரிகோர்ட்டு உத்தரவினால் துணியினாலாவது கயிற்றினாலாவது மற்றயாதொன்றினாலாவதுகாவ லாளியைப்பின்கட்டுமாருகக்கட்டுகிற வழக்கத்தைநிறுத்தவும் அந்த ப்படி நடப்பிப்போனை உத்தியோகத்தி லிருந்து நீக்கவும் அவசி யமானால் அதற்குப் பதில் கைக்குட்டை போடலாமென்றும் கட் டளை :* ௲அ௰௬௯ செப்டம்பர்மீ உ௬ உத்தரவினால் சர்க்கா ர் உத்தியோகஸ்தர் சக்கார் கிஸ்தியையாவது லஞ்சம் அல்லது இன் மாபாவது வசூல்செய்கிறகுற்றத்தை உண்டென்று ஒப்புக்கொள்ளு ம்படி செய்கிறது திருட்டு உண்டமையைக்கண்டுபிடிக்கிறது முதலா ன செய்கைகளில் கெட்ட எண்ணத்தோடு பலவந்தஞ்செய்தலே சித் திரவேதனையென்று நினைக்கவேண்டியதெனக்கட்டளை-

(திருட) அடிக்காதே இப்போதே காட்டுறேன் - உனக்
காகாதபேர்களை மாட்டுறேன்
இடிக்காதே ஐயையோ இடுப்பு முறிந்தது
மடிக்காதே விலாவென் மண்டை திறந்தது (அடிக்)

(தபே) ஜடைப்பில்லை ஜடைக்குச்சு எங்கடா - இதில்
தட்டான் கோமுட்டியும் பங்கடா - கட்டைத்
தடியா வுனக்கென்ன பொங்கடா - உன்னைத்
தலைகிழாய்க் கட்டுறேன் தொங்கடா
கடைக்காரன் கையிலே கொடுத்ததாகச் சொல்லு
கைக்குக்குட்டை போட்டுடைப்பேனுன் பல்லு (ஹாத்)

(திருட) கொப்புஜடைப்பில்லை கட்டி - குப்பி
குச்சுடனே தங்கக் கட்டி - சின்னக்
குப்புசெட்டி ரங்கசெட்டி - இவர்க்குக்
கொடுத்துவிட்டேன் மூட்டை கட்டி
இப்பொழுதைக் கேட்டாலில்லை யென்கிறார்கள்
எப்போதுமிவ்வித மாகத்தின்கிறார்கள் (அடி)

(தபே) திருட்டிற்கலந்தபே ரெத்தனை - சொல்லு
சின்னானகப்பனை மூத்தனைப் - பொல்லா
முரட்டுப்பயல்ராம பத்தனைக் - காட்டம்
மூடர்களைசெய்தா ரித்தனை
திருட்டுநாயேயுன்னைச் செருப்பாலடிக்கிறேன்
புரட்டாதே உண்டியைப் பிடித்துக்கடிக்கிறேன் (ஹாத்)

(திருட) களவுசெய்தவர்கள் எட்டுப்பேர் - வெளியில்
கல்லெறிந்தவர்பதி னெட்டுப்பேர் - இதற்
குளவாயிருந்தோர்க ரெட்டுப்பேர் - முன்
னுதவிசெய்தவர்களமு வெட்டுப்பேர்
களவுச்சொத்துவாங்கும் காளிசெட்டியிவன்
அளவிலாதுதவிசெய் அப்புசெட்டியிவன் (அடி)

(தபே) என்னென்னமோவாயால் மொழுகிறாய் - இப்போ
தெங்களுக்கென்னதான் தருகிறாய் - பார்
என்னுதவிபெற்று வருகிறாய் - இதனால்
இன்றைக்கேவிடுதலை பெறுகிறாய்
பொன்னுவெள்ளியெங்கே புதைத்தாயதைவெட்டு
பொன்னைமாத்திரம் அடமுன்னே கைமேற்கொடு (ஹாத்)

| | |
|---|---|
| (திருட) உமக்குஞ்சேவகருக்கும் | நூறுபொன் - போலீ |
| சொத்தாசைக்கு யெழு | நூறுபொன் - ராயர் |
| தமக்கோராயிரத்திரு | நூறுபொன் - மற்றச் |
| சாக்ஷிகளுக்குமூந் | நூறுபொன், |
| தருகிறோமிப்போதே | தங்கவெள்ளிப்பூணும் |
| தாசில்தாருக்கீவோம் | தயவுசெய்யவேணும்(அடி) |

**தபேதாரன்சொல் - வசனம்.**

ஆ - ஆ - ஆ - ஆ - அமொபாண்சோத் - நம்பள்க்கி வெகுநாளாத் தெரியும், இந்தக்காளிசெட்டி வெகுநாளா திருட்டுடைமைவாங்கிறுன், அப்புமொட்டி சேமெ சேமெ சோரிபாபத்நில் கலந்திருக்கிறுன் நான் அறிவேன் - ஷபாஷ் - இப்போ ஆட்பிட்டுக்கொண்டாங்கோ என்றுவோய் காளிசெட்டி - ஓய் அப்புமொட்டி - என்றுசொல்றிங்கோ, பலேகிரஸ்தமார்க்கந்தான்.

**காளிசெட்டியும், அப்புமொட்டியும், தபேதாரனுக்குச்சொல்**

**வசனம்.**

ஐயா, தப்பேதாரரே, பேதவானிக்கி கோபம்வஸ்தே பெறுவிக்கிசேட்டென்பதுபோல எங்களால் ஆகத்தக்கது என்னஇருக்கிறது - ஆனைவிட்டதுசனி - கொல்லவரும் யானைகளுக்குமுன்னே கல்லுகளைவிட்டெறியலாமா, உண்ணுமல் தின்னுமல் ஊரம்பலமரனேம் கோபித்துக் கொள்ளவேண்டாம் எங்களுக்கு மாமூல்மரியாதைதெரியும், கோமுட்டிவீட்டில் கொள்ளைபோனபோதே எங்கள்வீடுகளும் மத்தியானக்கொள்ளையாகிறது சித்தமென்று திகில்பட்டுமானத்துக்கஞ்சிக் கடனுடன்வாங்கி மூட்டைகட்டி வைத்திருக்கிறோம் கட்டிவைத்த புதையலைக் கல்லியெடுத்தவர்போல் தட்டிக்கொண்டு பேசங்கள் காலின்மேலே சுற்றியபாம்பு கடித்தாலொழியப்போமா?, அதை இரகசியமாய் வாங்கிக்கொண்டு எங்களை வெளியிலிழுத்துமானபங்கஞ்செய்து அவதிப்படுத்தாமல் போய்விடுங்கள் எய்தவனைநோகாமல் அம்பைநோவதுபோலிருக்கிறது. *

---

* ௲௮௱(௬௰) டிசம்பர்மீ ௰௨ உத்தரவினால் ஜனங்கள் தாசில்தார்கள் தாலூகா ஜனங்களின் சவுக்கியத்தையும் விர்த்தியையுந் தேடுவது மல்லாமல் கள்ளர்கள் போலீசு ஆபீசர்கள் இவர்களுடைய உபத்திரவங்களினின்றும் ஜனங்கள் காக்கப்படவேணுமென்றுங்கட்டளை.

அவர்கள் இரகசியமாகக்கொடுத்ததைவாங்கிக்கொண்டு
திருடனைப்பார்த்துத் தபேதாரன் சொல்லுகிறவசனம்.

அரெடிரண்சோத் நிஜஞ்சொல் - நீசொல்லுகிற காளிசெட்டி அப்புரெட்டி - இவர்கள்தானு மெய்சொல்படவே.

திருடன் சொல் வசனம்.

சாமி இவர்களைப்போலேதானிருந்தது ராத்திரிவேளையில்கொடுத்தது இவர்களோ இவர்களுடைய சகோதரர்களோ, என்னமோ தெரியவில்லை மேலும் நான்சொல்லப்பட்ட - காளிசெட்டி - அப்புரெட்டி - இந்தக்கிராமஸ்தரல்ல, வேறேகிராமஸ்தர்.

தப்பேதார் சொல் வசனம்.

அரெ ஹுத்தேரி பாண்சோத் படவே - சும்மா சும்மாசொல்ரு பாண்சோத் நடடாபடவே. சலாமையா நீங்கள் போங்கள் இவன் கெட்டான் படவே.

தொப்பைக்கூத்தாடி தபேதாரனுக்குச்சொல் வசனம்.

ஐயா, தபேதாரரே, நீர் நிரபராதிகளான - செட்டி - ரெட்டி - இவர்களை இந்தப்படிசெய்தால் அவர்கள் துரைகளிடத்துக்குப் பிராதுக்குப் போகமாட்டார்களா.

(தபேதாரன்) அடே யிவர்கள் கெட்டார்கள் துரைகளிடத்துக்குப் போகிறவழிதான் இவர்களுக்குத் தெரியுமா, ஒருவேளை தெரிந்தாலும் அவனையு மிவனையுங் கட்டிக்கொள்ள இங்கே கொடுத்ததற்கு நாலத்தனை கட்டிக்கொண்டு போகவேண்டாமா, மேலும் இந்தப்படப்பசகள் - வீடு - வாசல்-பயிர்- வர்த்தகமிவைகளை விட்டுப்போகிறதேயில்லை, போனாலும் லஞ்சம்கேசு.ருசுவாகிறதில்லை இவர்கள்எங்களைஜெயிக்கிறது ஒருமான்குட்டி பெரும்புலியையடிக்கிறதுபோலாகும். (தொ) ஆகிலும் உத்தியோகத்தின் மதிப்பையோசித்தபியுங்கள் நாய்க்கு முழுத்தேங்காய் பொறுக்குமக, சாகிறபேர்க்குச்சமுத்திரம் முழங்கால் ஆழமென்றெண்ணி திர்ப்பயமாய்க்கொள்ளையடிக்கிறீர்கள்

தாசில்தாரர் இராயசக்காரருக்குச்சொல் விருத்தம்;

இராயசக்காரரே யிவ்விடந்தனிற்காத்திருக்கும்... ... ... ...
பிராதியுஞ்சாக்ஷியான பேனாயும்நமக்கிங்கொன்றும்... ... ... ...
கிராமமேலதகரார்சொல்லுந் தப்பிலிகளையும்நாளைக்... ... ... ...
சாராக்கச்சேரிக்குக் கடுகியேவரச்செப்பீரோ... ... ... ...

தாசில்தார்-சொல்-வசனம்.

ஒப் இராயசக்காரரே; இந்த முகத்தமாவிற்சேர்ந்தபிராதிசாக்ஷிகளையும் நம்முடைய மனதின்படி நடந்துகொள்ளாதபேர்களாகிய கைதிகளையும், மச்சத்தோடு நாளைத்தினம் கச்சேரிமேலர்க்கு ஆஜர் செய்விக்கும்படி திட்டப்படுத்தும்,

தொப்பைக்கூத்தாடி சபையாரைப்பார்த்துச்
சொல் - வசனம்,

சத்து - சத்து - பேசாதே - பேசாதே-பாத்கர்நகோ நிவர்த்திச்செல்லன் - தலைவிரிச்சான் - எரிவாய்த்தாண்டவராயன் - அப்புக்காத்தான் இவர்களையறிவேன் - இவர்கள்பேர்போனதிருடர் - இவர்கள் ஒருவீட்டில் கொள்ளையடிக்க வேணுமென்றால் முதலில்ஒருவருக்கும் அனுமான முண்டாகா திருக்கும்படி உள்ளுக்குள்ளே சொல்லியனுப்பிக்கொண்டு ஒரு சந்தைக்கடையில் கூட்டஞ்சேருகிறது, அப்போது இன்ன கிராமத்தில் இன்னவீட்டில் கொள்ளையடிக்கவேணுமென்று தீர்மானித்து அதற்காக அமாவாசைக்கு நாலுநாள்முன்னும் நாலுநாள்பின்னுமாகப்பார்த்து ஒருதினமேற்படுத்தி நிச்சயித்த அன்றயதினம் யாதொரு சாராயக்கடையிலாவது, கள்ளுக்கடையிலாவது, வந்துசேர்ந்து குடித்துத்தான் புறப்படுகிறது ஊர்த்தலையாரி வலையனுக்குமுன் சமாச்சாரந் தெரியும், முக்கியமாய்க் களவுசங்கதி அக்கம்பக்கமிருக்கிற சாராயக்கடைக்காரருக்கு முன்னேயாவதுபின்னேயாவது தெரியாமற்போகிறதில்லை-ஒருதட்டான் ஒருகோமுட்டி செட்டி - உளவில்லாதிருப்பதில்லை, இந்தத்திருட்டையுடக்கக் கருடனுக்கு ஊர்க்குருவிபறக்கக்கற்றுக்கொடுத்ததுபோலவும், கண்ணுள்ளோனுக்குக் குருட்டன்வழி காட்டியதுபோலவும், நானொரு யுக்தி சொல்லுகிறேன்கேளுங்கள்

முதலாவது-ம - ா - ா - லார்டாரீசு நோடிபகேஷனில் கண்ட விதமான பரிக்ஷைசெய்யப் பட்டவர்களும், நடத்தையுள்ளவர்களுமாத்திரமே கிரமைனல்கோர்ட்டு ஹெட்போலீசு - இந்தஅதிகாரங்களுக் கேற்படுத்தப்படவேண்டும்,

இரண்டாவது - சிபாய்களைப்போல ஆயுதப்பயிற்சிசெய்விக்கப்பட்டு ஆயுதங்கள் வைக்கப்பட்ட போலீசு சேவகர் மவுஜெ கிராமங்களில் சாலுவாக வைக்கப்படவேண்டும்.

மூன்றாவது : அந்தந்தத் தாலூகாவில் அல்லது கிராமத்தில் தீன த்தித் திருட்டைமாத்திரங் குறிப்பாகக்காட்டுகிற ஒரு விசேஷசர்வ

காரி அல்லது இங்கிலீஷ் டபல்ஹாரன் என்கிற கொம்பும் ஒருபேரி யும் வைக்கப்படவேண்டும்.

நான்காவது ஒருகிராமத்தில் தீவர்த்திக்களவு நடக்கிறசமயத்தி ல்மாத்திரம் பாரார்ச்சேவகர் பக்கத்துக்கிராமத்துக்குத் தெரியும்படி நாலுதிக்கிலும் ஒடிவிடாமல்பலதரம் ஷெ-ரணகாளி யூதப்பேரிமோ தவேண்டும். அதைக்கேட்ட அடுத்த கிராமஸ்தரும் அந்தப்பிரகாரம் ஊதிமோதவேண்டும். இந்தப்படி செய்வித்தால் ஒருமணிநேரத்துக் குள்ளாக ஒன்பதுகாதத்தெரியும், திருடர் [illegible]மறைய இடமிராது தக்ஷணம் வெகுதூரம் சுற்றுக்கிராமஸ்தரும், சேவகரும் எச்சரிக்கை யாகி நாலுதிக்கிலும் உடனே வழிமடக்கிப்பார்க்கும்போது பொழு துவிடியுமுன் எந்தத்திக்கிலாவது கள்ளரகப்பட்டுக் கொள்ளுவார்க ள், செலவு அதிகமாகுமென்றால் நம்முடைய யுக்தியோடாது ஆகி லும் சிவில் கவிர்நான்டு அன் கவிர்நான்டு சார்வையிலிருப்பவர் சம்பள த்தில் நூற்றுக்கு இருபத்தைந்து விழுக்காடு பிடிக்கும்படி கோர்ட் டாப்டைரெக்டர்களுடைய உத்தரவு வந்திருப்பதாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள், அந்தப்படியானால் குடிகளுடைய தேகத்தையுஞ் சொத்தையுங் காப்பது வரிஇறைவாங்குகிற துரைத்தனத்தாருடைய கடமையாகையால் அதையிதில செலவுசெய்வார்கள்.

ஐந்தாவது, முக்கியமாய் எதைநடத்தாவிட்டாலும் இப்போது பங்காளத்தில் வெளிப்பட்ட ராஜதுரோகிகளும், துஷ்டருமாகிய கலகக்காரருக்காக ஏற்பட்ட- து அருளஹூ-த்து-மெகா-வது-ஆக்ட்டை ஸ்தாபித்து அதை இந்தக்கள்ளருக்கும் உபயோகப்படுத்தவேண்டும், உபயோகப்படுத்தினால் தீவர்த்திக்கொள்ளை அடங்கிப்போகும்,

பொதுவிருத்தம்!

தெருக்களிற்செல்வோர்தம்மைத்திருடர்களெனப்பிடித்து ... *
முருக்கியங்கவரால்கிட்டுமொத்தத்தைப்பெற்றச்செல்வப் ... ... *
பெருக்கினால்தமைமறந்துபெருமைச்சிந்தனையேகொள்ளும் ... *
செருக்குளதாசில்தாரர்திரும்பியேவந்திட்டாரோ ... ... ... *

வசனம்.

கேளூரான் அவிசாரிபோகக் குன்னத்தூராள் தெண்டஞ்சொ டுத்ததுபோல மெய்யான திருடனைமறைத்து அநியாயமாக மானஸ் தரைமிரட்டிப் பணம்பறித்துக் கொண்டபின்பு பேருக்கொரு திரு

ட்டைப்பிடித்தாக எஃப்பிக்கவும், வழியிற்போகிற - மறவனைக்குறவனைப்பிடித்துக் கிரிமினலில் கோர்ட்டுக்கனுப்பவும், அவர்கள் குசுவில்லையென்று விடுதலைசெய்யவுமான * அநேகதந்திரங்கள்செய்து பெற்றசெல்வப்பெருக்கினால் இறுமாப்படைந்திருக்கிற தாசில்தார் திருட்டுப்பிடிக்கப்போய்த் திரும்பிவந்தவிதங்காண்க.

தாசில்தாரருக்குப் போலீசு இராயசக்காரர்
சொல்-விருத்தம்,

இந்தத்தாலூகாவச்சேரிமகிரியெனுங்கிராமத்தில்... ... ...*
அந்தணனொருவன்தண்ணீரருந்தவோர்கிணற்றுக்கேகி... ... *
மந்திரமீதிற்சிந்தைவைத்ததிலிடறிவீழ்ந்தான்... ... ... ...*
அந்தத்துர்மரணச்சேதியானதுவந்ததையா... ... ... ... *

வசனம்.

இந்தத் தாலுக்கைச்சார்ந்த இமயகிரியென்னும் கிராமத்தில் ஒருபிராமணன் தீர்த்தஞ்சாப்பிடக் கிணற்றிலிறங்கும்போது மந்திரத்தின்மீதே சிந்தைவைத்துக்கொண்டு இறங்கினபடியால் காலிடறி விழுந்திறந்த அகாலமரணத்து அறிக்கை இதோவந்ததையா,

தாசில்தாரர் - சொல்வசனம்,

இதொன்றுவந்ததா - ஆகட்டும் என்னசெய்கிறது பணக்காரரிருக்கிறஇடமாகத்தான் காண்கிறது நாமேருத்தாய்ப்போய்விசாரணை செய்யவேண்டும்,

பொதுவிருத்தம்,

இதுவுமோர்கந்தாயந்தானெனமனமகிழ்ந்தேயாரோ ... ... *
வதைசெய்துகிணற்றில்தள்ளமறையவனிறந்தானென்று ... ...*
கதைகளைக்கட்டிவிட்டுக்காசுகள்பறிக்கநல்ல... ... ... ... *
தறியிதுவெனவேதாசீல்தாரரும்புறப்பட்டாரே... ... ... ... *

வசனம்,

இந்த அறிக்கை வந்ததைக்கேட்டு ஒருவன் கால்நழுவிக் கிணற்றில் விழுந்தது நமக்குப்பழம் நழுவிப் பாலில்விழுந்தது போ

---

* ௲௮௱௬௰ மார்ச்சிமீ ௰வ உத்தரவினால் அநேகபோலீசு ஆபிசர்கள் போலீசுக்கேசு விசாரணை குறைவாயிருப்பதால் மேலான கோர்ட்டுகளில் தள்ளும்படியாகிறது அவர்களுடைய நடத்தையில் திருஷ்டி வைத்துப் பார்த்துவரவேணுமென்று கட்டளை,

ஆயிற்றென்று அகமகிழ்க்கொண்டுமிகுந்தபூரிப்புடனே அகங்களித்து ஆடடா அடா கோட்டைவால் குதிரைக்கு ஜீனிகட்டு நம்முடைய சுயம்பாகி பரிசாரகன் இவர்களைப்புறப்படச்சொல், ராயசக்காரன் தப்பேதார் பத்துப்பேர்சேவகர் - மசால்ஜி - இவர்களெல்லாரும் வரவேண்டியதென்று சொல்லிப்புறப்பட்டு, கல்லடிசித்தன் போறவழி கல்லுகளெல்லாந் தவிடுபொடி - மண்ணடிசித்தன் போறவழி மண்ணுகளெல்லாந் தவிடுபொடி - என்றுசொல்வதுபோல்மகா நட்டஹாசத்தோடும்-டாங்கா - பாங்கா - முழக்கத்தோடும்போகிறவழியிலிருக்கிற கிராமங்களிலிவருடைய குதிரைக்கும், இராயசக்காரருடைய குதிரைக்கும், மற்றுமுள்ள பண்டிஎருதுகளுக்கும், சேவகருக்கும், குடியானவனுடைய வைக்கோற்போர்களும், கொள்ளுக்குந்தாரிகளும், வாழைத்தோட்டங்களும், இடையன்வீட்டுப்பால்தயிரும், ஆடும்-குடியானவன்வீட்டுக்கோழிக்குஞ்சும், கோமுட்டிக்கடையும், சாராயக்கடையும், கள்ளுக்கடையும், கொள்ளையாம்படி தாசில்தார் புறப்பட்டு வருகிறவிதங்காண்க.

இமயகிரியெனுங்கிராமத்தில்
தாசில்தார்போய்ச்சேர்ந்தவுடன் தப்பேதாரனுக்குச் சொல்

கட்டளைக்கலிப்பா.

தந்திரங்கற்றறியுந்தப்பேதாரே... ... .. ... *
தாசனாலே தொழுமரஞ்செய்வித்து ... ... *
நீர்த்தைவந்திட நீரிலிறந்தவன்... ... ... ... *
நெருங்குஞ்சுற்றங்களையுங்கிணற்றுக்குச் ... *
சொந்தக்காரர்களையும்அழைத்து நீ ... ... ... *
தொந்தரை செய்தால்துட்டுகைமேல்வரும் ...*
இந்தக்ஷணமேஇதைச்செய்துவந் .. ... ... ...*
தெண்ணிட்டுநிலறிக்கையிதில்வையே ... ... *

வசனம்.

எல்லாத்தந்திரங்களுமறிந்த தப்பேதாரே யாவரும் பயப்படத்தக்கதாக முன்னதாய்த் தச்சனைக்கொண்டு பச்சைமரத்தைவெட்டித் தொழுமரஞ்செய்வித்து இங்கேபோட்டுவைத்துப்பின்பு கிணற்றில் விழுந்திறந்த பிணத்துக்குடையவர்களையும், கிணற்றுக்காரனையும், கணக்கனையும், மணியக்காரனையும், நேற்றுமுந்தநாள் இறந்த பிராமணன்-இன்னசெட்டி - இன்னகோமுட்டி - அல்லதுசெட்டியோடு கடைத்தெருவிலாவது காட்டிலாவது - வீட்டிலாவது-தோட்டத்திலாவது கூக்குரலிட்டுச் சண்டைசெய்துகொண்டிருந்தாரென்

று சாக்ஷி சொல்லச் சிலபேரையுஞ் சம்பாதித்துச் சீக்கிரத்தில் கொண்டுவா ஜல்தி.

பொதுவிருத்தம்.

தொழுமரஞ் செய்தபின்பு துஷ்டசேவகருமூரில் ... ... ... *
கழுவுக்கேற்றிடுங் கோமுட்டி கதையெனக்கண்டபேரைப் ... ... *
பழிகள்போட்டிழுத்துத் தள்ளிப் பயப்பட்டங்கவர்த் துக்கித்தே ... *
அழநமன்போலத் தோன்றும் அமுல்தாரர் முன்விட்டாரே ... ... *

வசனம்.

தச்சனால் தொழுமரஞ் செய்வித்துச் சித்தமானபின்பு கொடிய துஷ்டத்தனத்தில் பழகியிருக்கிற சேவகர் கழுவுக்கேற்ற கோமுட்டி கதையைப்போல ஊரில் கொஞ்சம் பணக்கொழுப் படைந்திருக்கிற, ரெட்டி - கோமுட்டி - செட்டி - கவுண்டன் - முதலியார் இவர்கள் பேரில் வீண்பழிகள் போட்டு இழுத்துப் பயப்படுத்த அவர்கள் அவமானத்துக்கு அஞ்சித் துக்கமுற்றுப் பிரலாபித்து அழத்தக்கதாக எமதர்மராஜனைப்போல விளங்காநின்ற அமுல்தாரருக்கு முன்பாகக் கொண்டுவந்துவிட்டாரென்றறிக.

தரு - இராகம் - கலியாணி - அடதாளசாப்பு

பல்லவி.

இயமதூதர்போற் சேவகரிழுத்துவர எளியகுடிகள் வந்தாரே ... *

அநுபல்லவி.

நயமொழிகளில்லாமல் நடப்பதைச்சொல்லாமல்
நாரைப்பிடித்தொடுக்கும் நமன்முன்பாகவிடுக்கும் (இய)

[சரணங்கள்.]

பார்ப்பானைக்கொன்றோர் நீரென்றும் - இப்பொழுதும்மைப்
பாராவிலேவைப்போமென்றும்
சாப்பிடவிடுக்காமல் தண்ணீருங்கொடுக்காமல்
வாய்ப்பாகநடக்காமல் - வாய்மையையடுக்காமல் (இய)

எத்தனையோவிதத் தூறு - பேசி
எஜமானுக்குத்தூர நூறு
புத்திசொல்லிமிரட்டிப் பொய்மொழியாலுருட்டி
நித்தமிகப்புரட்டி நேர்ந்தலஞ்சஞ்சுருட்டி
பலவந்தமாக இழுத்துப் பார்ப்பான்செத்த
பாழுங்கிணற்றுக் குழைத்துக்

குலபந்துக்களுங்குண்ணச் சில்லம்பர்களும்நண்ணப்
பலதந்திரமும்பண்ணக் கொலையின்பொருளையுன்ன

இயமதூதர்

சேக்கர் தாசில்தாருக்குச்சொல் வசனம்.

புத்தி-மகாராஜ் - பம்மன்விழுந்து செத்துப்போனகிணற்றுக்குடையவனையும், பிணத்துக்குடையவனையும், இறந்துபோன பம்மன் அதற்குமுந்தியதினத்தில் நந்தவனத்தில் - நந்தியாவட்டம் - கு- மல்லிகை- ஊசிமல்லிகை-முதலாகிய புஷ்பங்கள் தேவபூசைக்குப்பறித்துக்கொண்டிருப்பதை அந்தத்தோட்டக்காரசெட்டி தன்னுடைய் தேவடியாளுக்கு வேணுமென்பதாகப் பறிக்கக்கூடாதென்று தடுத்ததின்பேரில் கலகமுண்டாகி அடே பார்ப்பான் ஆகட்டும் நாளையதினத்துக்குள்ளாக உன்னைச்சரிப்படுத்தி விடுகிறேனென்று சொன்னபோதுகேட்ட - நஞ்சப்பன்-நாகப்பன்-என்கிற இரண்டு சாக்ஷிகளையும், ஷை செட்டியையும், பம்மனுக்கு இன்னஞ் சிலவிரோதிகளாகியபேரையும், கணக்கர் - மணியகாரரையும், பத்தாதாரர்களையும், ஆசர்படுத்தி இருக்கிறோம்சாமி.

தாசில்தார் தப்பேதாரனுக்குச்சொல் வசனம்.

அந்தக்கிணற்றுக்குடைய குடியானவனை வரச்சொல், அடேலுச்சாலவுண்டிமகனே உனக்குப்புத்தியில்லையா, கிணற்றைச்சுற்றிலும் சுவர்போட்டுப்படிகள் செவ்வைப்படுத்தித் தெப்பக்கட்டைபோட்டுவைக்கும்படி தாக்கீதுசெய்திருக்க, அப்படிசெய்யாமல்உத்தரவுக்கு விரோதமாக மிகவும் பேபந்தாய் வைத்திருந்தபடியால் இந்த மரணம் அந்தப்பிராமணனுக்கு நேரிட்டது, உன்கிணற்றிலிந்தப்பிணமகப்பட்டபடியால் ஒருவேளை கொலைநடந்து அதில்நீயும் சம்பந்தப்பட்டிருப்பாயென்று நினைக்கத்தக்கதாயுமிருக்கிறது, இதைக்குறித்துப் பின்னால் விசாரிக்கிறேன், அஜிதப்பேதார் (ஜீ) இவனைக் கொண்டுபோய்த தொழுமரம் போட்டிருக்கிற சாவடிப்பாராவில் வை, அந்தப்பிணத்துக்குடைய அய்யங்காரை அழை,

தாசில்தார் பிணத்துக்குடைய அய்யங்காருக்குச்
சொல்-வசனம்.

என்னகாணும் அய்யங்கார்-இறந்துபோன பிராமணன் உனக்கு என்னமுறை ஆகவேணும், (நமஸ்காரம்சுவாமி) நேக்குஇறந்துபோனவர் பின்ளைதாராகவேண்டும்.

(தாசில்தார்) அதனலதானே இந்தப்படி செய்வித்தீர் அந்தப்பிராம ணன் இறந்தராத்திரி அர்த்தஜாமவேளையில் அவருக்கும் உமக்கும் வாக்குவாதம்நடந்து உங்கள்வீட்டில்மெத்த அரவமாயிருந்ததாகப்பக்கத்தார்கள் சொல்லுகிறார்கள் அது நிஜந்தானு,

(அய்யங்கார்) ஹரி ஹரி- கலியுகமேலிட்டுக்குலமுறைபோய்விட்டதுபோலாச்சுது - அய்யோ, என்ன சுவாமிதர்மமேஜெயம்பெருமாளே துணையென்றிருக்கிறேன் நானொரு பாவத்தையுமறியேன் நான் அன்றுராத்திரி பெருமாள்கோவிலுக்குப் போயிருந்து பெருமாளுக்குச் சாத்துபடியான புஷ்பங்களும், பிரசாதங்களுமெடுத்துக்கொண்டு தேவதாசி ஆதிலட்சுமி வீட்டுவழியாய் வந்துகொண்டிருக்கும்போது அவளைக்கண்டுவருவோமென்றுதா யுள்ளே நுழைந்தேன் - ஆனல் ஏதோ உடம்புஒருவிதமா யிருந்தபடியால் கொண்டுபோனதெல்லாம் அவளுக்குச் சமர்ப்பித்து அங்கேயேபடுத்திருந்து காலமே எட்டுமணிக்குவிழித்துக்கொண்டுவெளியில்வந்து இந்தச்சமாசாரங் கேள்விப்பட்டதேயொழிய நானொருபாவத்தையுமறியேன் - இதுதங்களுக்கு வெறுவாயைமெல்லுகிறவனுக்கு வெள்ளவல் கிடைத்ததுபோலிருக்கிறது.

தாசில்தார்சொல் - வசனம்.

சரி சரி - தெரிந்ததுகாணும் - அய்யங்கார் நீயும் அந்தத்தேவடியாளுங்கூடிச் செய்தகாரியமாகவே தெரியவருகிறது, அஜீதப்பேதார் இந்த அய்யங்காரைக் கொண்டுபோய்ப் பாராவில்வைத்துஅந்தச்சிறுல ஆதிலட்சுமியைக்கொண்டுவந்து ஆஜர்படுத்து-அந்தச்செட்டிக்குருபுலாவ்.

செட்டிக்குத் தாசில்தார்சொல் - வசனம்.

என்காணுஞ் செட்டியாரே நந்தவனத்துப்புஷ்பம் தேவதார்ச்சனைக்கு உதவக்கூடாதென்று தேவடியாள் கொண்டைக்குச்சென்டு கட்டிக்கொண்டுபோய்க் கொடுப்பது சிரேஷ்டமென் றெண்ணித் தேவபிராமணனைக்கொன்று தெருக்கிணற்றிற் போட்டதாய்ப் பக்கத்தாரும், நஞ்சன் - நாகப்பனென்கிற இரண்டுசாக்ஷிகளும் சொல்லுகிறார்கள் ,என்னசொல்லுகிறாய்.

செட்டிசொல் வசனம்.

சுவாமி இதெல்லாஞ் சுத்தஅபாண்டம்- செல்வஞ்சொல்லுக்குஞ் சாது - மூந்தாநாள்காலமே புறப்பட்டுச் சரக்குவாங்குவதற்காகஇவ்விடத்துக்கு நாற்காதவழிதூரமாகிய ஒருகிராமத்துக்குப்போயிருந்

து இப்போது நாலுநாழிகைக்கு முன்னதாகத்தான் வீடுவந்துசேர்ந்தேன். செட்டிமகனுக்குத் தேவடியாளுமுண்டோ, இருந்தாலும் வெளியில்சொல்வதுண்டோ, நம்பவேண்டாம்சுவாமி.

தாசில்தார் தப்பேதாரனுக்குச் சொல் வசனம்,

ஓ - ஓ இந்தச்செட்டி யேதோ கதைகள்சொல்லி முழுப்பூசனிக்காயைச் சோற்றிலேமறைக்கிறான் - இவனையுங்கொண்டுபோய்ப் பாராவில்வை.

பொதுவிருத்தம்,

சாட்டியபழியைத்தானே ஸ்தாபித்துச்சாக்ஷிசேர்த்துக் ... ...
கோட்டுக்குஅனுப்பியெங்கள்குடிகளைக்கெடுக்கவேண்டாம் ... ...
கேட்டதுகொடுப்போமென்றுகெஞ்சிஅத்தாசீல்தாரைக் ... ...
கூட்டமாய்க்குடிகளெல்லாங்கும்பிட்டுத்தொழுகின்றாரே ... ...

பொதுவசனம்;

அகோதெப்படியென்றால், குடிகள் தாசீல்தாரைப் பார்த்து எங்கள்பேரில்போட்ட பழியைத்தானே ஸ்தாபித்து அதற்கு இரண்டுபொய்ச்சாக்ஷிகளைச்சேர்த்துக் கோர்ட்டுக்கனுப்பி எங்கள்குடியைக்கெடுக்கவேண்டாம்சுவாமி கேட்டதைக்கொடுத்துவிடுகிறோமென்று அவர்கள்தொழுது வணங்கிப்பிரலாபிக்கிறவிதங்காண்க,

குடிகள் பிரலாபதரு-இராகம்-பைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

கேட்டதெல்லாங்கொடுப்போம்மெய்யா- எம்மைக்
கெடுக்காமல்விட்டுவிடும் ஐயா

அநுபல்லவி,

வீட்டையும்மாட்டையும் வீதியிலேவிற்றுத்
தோட்டந்துரவுகளைக் கொதுவையாகவைத்து (கேட்)

சரணங்கள்.

அந்தணனோடுபகை செய்ததுமில்லையே
அர்த்தபாத்திரியில்கூசல் ஆனதுமில்லையே
நந்தவனத்தில்சண்டை நடந்ததுமில்லையே
நஞ்சனை நாகனை நாம்பார்த்ததில்லையே (கே)

பஞ்சைக்குடிகளைப்பா ழாக்கிலென்னசிலாக்கியம்
பாபச்சொத்துக்களாலென் டாமோமகாபாக்கியம்

வஞ்சகநெஞ்சுள்ளோர்க்கு வருவதுண்டோயோக்கியம்
வசையாய்முடிந்ததே பிசகாவேதவாக்கியம் (கே)

அநியாயவழிகளில் அனுதினம்நடக்கிறீர்
அக்கிரமவிஷயங்கள் அனைத்துமேஇழைக்கிறீர்
மனமுதனிலிரக்கம் இல்லாமல்விடுக்கிறீர்
மாநிலத்தோர்நீதி அடைவதைத்தடுக்கிறீர் (கே)

தாசில்தார் ஒத்தாசைக்காரனுக்குச்சொல் - விருத்தம்,

உறவினன்போலுசந்த ஒத்தாசைக்காரனேகேள் ... ... ... *
திறமையோடிவரால்மொத்தத்திரவியம்வாங்கிநீயே ... ... ... *
மறைவிலேயதனையெந்தன்மாப்பிள்ளைவசத்திற்சேர்த்துக் ... *
குறைவுகள்சொல்லித்தூறுங்குடிகளைத்துரத்துவாயே ... ... *

வசனம்,

பந்துவைப்பார்க்கிலும் பத்துப்பங்கதிகமாக எனக்கு உகந்த படி நடப்பிக்கிற போலீசொத்தாசைக்காரரே, கலைப்பார் கலைத்தால்கல்லுங்கரையும், இந்தஜனங்களிடத்தில் உம்மால் கூடிய சதுர்வித உபாயங்களையுஞ் செய்து கடினமில்லாமல் ஈரச்சேலையைப்போட்டுக் கழுத்தை யறுத்தாவது பெரியமொத்தங்களாகவே இரகசியமாய்வாங்கி அதுகளை நம்முடைய மாப்பிள்ளைவசத்திற்சேர்த்துவிட்டுக் கண்டபடி ஏதோ குற்றவுகள்சொல்லிக் கூக்குரலிடுகிற குடிகளைத் துரத்திவிடும்,

போலீசு ஒத்தாசைக்காரன்

தப்பதாரனுக்குச்சொல் - வசனம்,

அஜீதப்பேதார் அந்தக்கிணற்றுக்குடையவனையும், பிணத்துக்குடையவனையும், செட்டியையும், தேவடியாளையும், ஒவ்வொருத்தராய் இரகசியமாக இந்த அறைவீட்டுக்குள்வரச்சொல், இதோவுந்தாங்களய்யா, இவர்களுக்கு என்னசொன்னாலுந் தெரிகிறதில்லை நீங்களாவ் புத்திசொல்லுங்கோ சுவாமி,

ஒத்தாசைக்காரன் மேற்சொல்லிய

ஜனங்களுக்குச்சொல்-வசனம்,

என்னகாலும் கையிலே விளக்கைப்பிடித்துக்கொண்டு கிணற்றில்விழுகிறீர்கள் உங்களுக்குக் காரியாகாரியந்தெரிகிறதில்லை தாசில்தாரருக்குநடப்பிக்கிற மரியாதைப்பிரகாரந் தகுந்தபடி நடப்பித்து விடுங்கள் சும்மாவம்பிலே விட்டுவிடவேண்டாம் அவருக்கு அநேக

தந்திரங்கள்தெரியும் மலையைஅணுவாக்குவார் அணுவைமலையாக்கு
வார் வல்லவர்க்குப்புல்லும் ஆயுதமாம் காட்டுவிக்கவும் தெரியுந்தே
ற்றுவிக்கவுந்தெரியும் உங்களுடையசங்கதியில் அவர்ஏதோஒருவிதக்
கூண்டு முடைந்துகிரிமினல் கோர்ட்டுக்கு அனுப்பிவிடுவாராகில் அ
வ்விடத்திய சங்கதிதான் பிரசித்தமா யுங்களுக்குத்தெரியுமே அவ்வி
டத்துக்கிரமினல் ஐபாப்நவிஸ் முதலாகியும்பர்களே கிரிமினல் ஜட்
ஜிகளாக இருந்துநடத்துகிறபடியால் அவர்களுக்கு நானூறு-ஐந்நூ
று-கொடுத்துத் தப்பித்துக்கொண்டு வரவேண்டியதாயிருக்குமே இ
வ்விடத்தில் அதில் பாதித்தொகையாவது கொடுத்துச்சுளுவில் தப்பி
த்துக்கொண்டு வீடுவாசலுடனே இருக்கலாம் ஆருடையவார்த்தையு
ங்கேட்கவேண்டாம் சொக்கரித்தபேரெல்லாங் கூடத்திப் பாயமாட்
டார்கள் தொகையை ஜாக்கிரதைப் படுத்துங்கள் வெள்ளம் வருமுன்
அணைபோலிக் கொள்ளவேணும் என்னசொல்லுகிறீர்கள் நெருஞ்சி
முள்தைத்தாலும் குனிஞ்சுதானேபிடுங்கவேணும்.

ஜனங்கள்சொல்லுகிற - வசனம்,

மெய்தான்மெய்தான்சுவாமி நல்லபுத்திசொன்னீர் உறவுபோ
லிருந்து குளவிபோல்கொட்டுகிறீர் இதோ எங்களுக்குஇந்தத்தொ
கைகளைக் கொண்டுவந்தோம், அதுகளைவாங்கி எஜமானுக்குச்செலுத்
தி எங்களைவிட்டுத் தாங்கள் கசுபாவுக்குத்தயவுசெய்யுங்கள்

பொதுவிருத்தம்.

மடங்கலோர்மானைக்கொன்றுமகிழ்விருந்துண்டபின்னர் ... *
தொடங்கியநரிகள்மீந்தகொக்குண்ணுமாறுபோலத் ... ... *
பிடுங்கித்தாசில்தார்தின்றபின்னொத்தாசைக்காரர் ... ... ... *
அடங்கலும்ஜனங்கள்சொத்தைஅறுக்கவேபுறப்பட்டாரே ... ... *

வசனம்,

சிங்கமானது ஒருமானைக்கொன்றுதின்றுமீந்த-கால்-தோல்-மு
தலாகியதை நாய்நரிகள் பிடுங்கித்தின்பதுபோலப் பெருந்தொகை
யைத்தாசில்தார் பற்றிக்கொண்டபின்பு ஒத்தாசைக்காரர்உதவியமட்
டும் பிடுங்கித்தின்னப் புறப்படுகிறவிதங்காண்க,

தரு-இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

எங்கள்பங்குக்கொன்றுமில்லையா- கிராமத்தாரே
எங்கள்பங்குக்கொன்றுமில்லையா

அநுபல்லவி.

உங்களைவிடுவிக்க உதவிகள்தேடியே
ஓங்கிரண்டுவரும்மென் றுள்ளத்தில்நாடிய (எங்கள்)

[சரணங்கள்.]

வாக்குமூலத்தைப் புரட்டினேம் - சாக்ஷியாக
[illegible]ந்தபேர்களையு மிரட்டினேம்
[illegible]க்குவராமல் நிறுத்தினேம் - இதைக்குறித்து
துரைக்கறிக்கையில் திருத்தினேம்
ஆக்கினைதுரைவிடும் தாக்கிதுதனைக்கொய்து
[illegible]க்குதவிகளோடு சாக்கிரதையேசெய்த (எங்கள்)

சம்பளம் அஞ்சேரூபாய் - எங்களுடைய
சம்பாத்திய மைம்பதுரூபாய்
செம்பொன்னணிக் காயிரம்ரூபாய் - வைத்திருக்கின்ற
தேவதாஜிக் கொன்பதுரூபாய்
ஐம்பமுறும்செலவு சம்பவித்ததுஐய
நம்புமதுபணம் நமக்கிங்குதவிசெய்ய (எங்கள்)

பெருமொத்தஞ்சுயே தாருக்குக் - கைக்கூலியில்
பிச்சைப்பொடிக்கா செங்கட்டு
வருமிந்தச்செல வுகட்குக் - கொடுப்பது
[illegible]க்கமல்லவோ உங்கட்குத்
தருணமத்திலொரு விரகுனைதருமெம
திருதயமகிழவே பொருளதுதருமெனும் (எங்கள்)

பொதுவிருத்தம்.

குடிகளிவ்வண்ணமாகக்கொடுத்தபின்னந்தணன்கால் ... ... ...*
இடறியேகிணற்றில்வீழ்ந்தேஇறந்தனனென்றுசொல்லி ... ...*
அடலுறஅன்றஜ-ருக்கர்ஜியும்வரைந்துவிட்டுத் .. ... ... ...*
திட்டபடலாகத்தாசில்தாருந்திரும்பினரோ ... ... ... ... ✡

வசனம்.

குடிகளிவ்வி[illegible]தமாகக் கொடுத்தபின்பு உடனே அ[illegible]க்கு இறந்துபோனபிராமணன் தாகத்துக்குத் தண்ணீர்சாப்பிடக் கிணற்றிலிறங்கும்போது காலிடறிவீழ்ந்ததாய் அர்ஜிமூலமாக ரிபோர்ட்டு செய்துபோட்டுத் தாசில்தார் தமதுபரிஜனங்களோடு- டாங்கா-[illegible]ாங்

காருமுழக்க வெகுதடபடலோடு கசுபாவுக்குத் திரும்பிப்போய்விட்டவிதங்காண்க-

பொதுவிருத்தம்,

காசிலஆன்கோர்ட்டுகைலஞ்சம்வாங்கியுண்ண... ... ... ... *
நாசமேசெய்யும்பொல்லாநமனெனுந்தசில்தார்தம் ... ... *
வாசமாமிடத்துக்கேகவருத்தமதடைந்தபேர்கள்... ... ... *
ஓசையோடோலமிட்டேஊரில்வந்தழுகின்றாரோ ... ... *

வசனம்,

பணத்தாசைகொண்டு பிணக்காரரிடத்திலும் - பணக்காரரிடத்திலுங் கணக்காக வாங்கிவாங்கி ஊரைநாசமாக்குகிற தாசில்தாரரும் போலீசு ஒத்தாசைக்காரர் முதலாகியபேர்களும் ஜீவனங்கொண்டு போகச் சஞ்சரிக்கும் நமனும் அவனுடையதூதரும் அல்லதுபண்டாரிக்கு திலாக்காரரும் கொள்ளைக்காரரும் ஊரைவிட்டுத் தொலைதல்பேரல் போய்விட்டபின்பு-கொடுத்துக்கெட்ட குடியானவர்கள்முதலாகியபேர்கள் தலைமேல்கைவைத்து ஓலமிட்டழுகிறவிதங்காண்க.

ஜனங்கள்புலம்பல்.

தரு - இராகம் - சௌராஷ்டிரம் - அடதாளசாப்பு.

பல்லவி.

இந்தப்படியநியாயநடத்தினால் - எந்தப்படிபிழைப்போம் - நாம் எந்தப்படிபிழைப்போம்

அநுபல்லவி,

வந்துவந்திவர்நம்மை வதைத்துமிகவைது
தொந்தரைகளுஞ்செய்து துட்டுகளுங்கொய்து (இந்த)

[சரணங்கள்]

தவறில்லீழ்ந்தந்தணர் தாமேயிறந்தாரோ
தக்ஷணம்தாசில் தாரும்வந்தாரோ
அவமதிப்புடனம்மை நடத்தவும்நினைந்தாரோ
ஐந்நூறுதந்தபின் அங்கனெபறந்தாரோ (இந்த)

அசூரிலிருப்பவர் ஆனந்தராயரோ
அசிஸ்டாண்டுவேறில்லை அண்ணாஜிராயரோ
செஸன்கோர்ட்டிலார் சீநிவாசராயரோ
தெரியுமேசப்கோர்ட்டில் சிதம்பரராயரோ (இந்த)

இவரெழுதியப்படி அவ்வொல்லாம் நடக்கிருர்
லஞ்சமோகைகொண்ட மட்டும் அடிக்கிருர்
அவர்களுக்கும் ஆள் மட்டுங்கொடுக்கிருர்
அநியாயமிவர்செய்தால் ஆர்வந்து தடுக்கிருர் (இந்த)

முஷ்கியும்போலீசும் ஒன்ருய்க்கலந்ததே
மூறைமனுநீதிஎங் கேயோபறந்ததே
கலிகிசிர்யோஷிகள் இவர்வீட்டில்கிறந்ததே
நாட்டுக்காவலென்ப தெல்லாங்குறைந்ததே (இந்த)

துரைக்குச்சொல்லப்போனுல் துரத்திடப்பார்க்கிருர்
தொந்தரைசெய்தால்சா வடிக்குறித்தாக்கிருர்
சிரஸ்தாதாரோகொஞ்சஞ் செலவுக்குக்கேழ்க்கிருர்
செலுத்தாவிடில்வழக்கைத்திருப்பியேகோர்க்கிருர் (இந்த

பொதுவிருத்தம்,

பட்டியில்மாடுபோகப்பயிரெல்லாம்அழிந்துபோக ... ... *
நஷ்டங்கள்டைந்துபோத்திராதாரியாகிப்பூமி... ... ... ... *
விட்டிடுங்குடிகள்நீர்மைவிசாரித்துக்கிராமத்தோறும் ... ... *
சட்டதிட்டங்கள்செய்யத்தாசில்தார்புறப்பட்டாரோ .... ... *

வசனம்.

மழையில்லாமையால் மேய்ச்சலில்லாமல் மந்தைமாடுகளுங் குண்டைஎருதுகளுஞ் செத்துப்பயிரழிந்துசோழிந்துபோத்திராதாரியாகி நிர்வாகமற்றுப் * பூமியைத் தரிசுவிட்ட குடிகளுடைய ஹால்ஹவால் விசாரித்துத் திட்டஞ்செய்யக் கிராமங்களுக்குத் தாசில்தார்வருகிற விதங்காண்.

தரு - அடாணுராகம் - ஆதிதாளம்.

பல்லவி

* திட்டஞ்செய்யப்புறப்பட்டார் - தாசில்தாரர்
திட்டஞ்செய்யப்புறப்பட்டார்

அநுபல்லவி,

கொட்டுமுழக்கத்தோடு இஷ்டநேசர்களோடு
நட்டுவர்தாளங்கள்போட நாடகப்பெண்களுமாடத் (திட்)

---

* ௲அ௨௨(௵) ஏப்பிரல்௴ ௨௨௨ உத்தரவினுல் கிஸ்திவசூல்பண்ணிவருவதில் பின்னுல்குடிகள்நொந்துபோகக்காரணமாகும்படியாய் நெருக்கிமனுஷ் ஜாஸ்திகாட்டவேண்டியதில்லை யெனக் கட்டளை,

* அட்டுங்கலென்றும்பேர்.

[சரணங்கள்.]

பட்டாதாரர் பிழைக்க — திட்டத்தினது
திட்டாவின்படி யழைக்க
கட்டர்த்துரிசைச்சேர்க்க விட்டார்ஆரொனப்பார்க்க
எட்டாத்தகரார்தீர்க்கக் குட்டர்க்கொடுப்பதேர்க்க(திட்)

ஹாலவால்கள் விசாரிக்கப் - பணம்பறித்து
ஆகம்மிகவும் பூரிக்கப்
பால்நெய்பழந்தன்கள்ளப் பரிஜனங்கேள்ளை கொள்ளக
கால்வாய்திறக்கமெள்ளக் கலகமுண்டாகித்துள்ள(திட்)

பேஜாவழக்கே தீர - இதென்றமட்டில்
பேதைகள்பயங் கூர
ஆசாரியர்வரவும் அவரும்லாபம்பெறவும்
கூசாமல்தட்டுமுறவும் குடிசைவிற்றுத்தரவும்(திட்)

பொதுவசனம்.

அகோ அதெப்படி என்றால், இவ்விதமாகத் தாசில்தார்சூறையாடுபுரி என்கிறகிராமத்துக்கு வரும்போது அத்தக்கிராமத்தார்கொட்டுமுழக்கத்தோடு மரியாதையாக எதிர்கொண்டுவந்தழைக்க அவருக்காக முன்னமேபோட்டுச் சித்தப்படுத்தியிருக்கிற பச்சைப்பந்தலில் வாழைமரங்கள்நாட்டி வெள்ளாழச்சிபுடவைகளையெல்லாங்கொண்டுவந்து மேலேகட்டிக் கீழேவிரித்துப்போட்டிருக்க, தோட்டிகள்- தலையாரிகள் - காத்திருக்க, மேளதாளத்துடனே கோவில் பிரசாதங்கள்வர, நாடகப்பெண்கள் நாட்டியமாட, ஊரிலுள்ள - அரிசி-பருப்பு - கோதுமை- சருக்கரை-பால்-தயிர்-நெய்-காய்கறிகள்-பழங்கள்-புஷ்பங்கள்-இளநீர்-கொள்ளுவிறகு வைக்கோல்வந்துநிறையதப்பேதார் - சேவகர் - பண்டிக்காரர்முதலாகியபேருக்கு-ஆடுகள்-கோழிகள்-முட்டைகள்-சாராயபுட்டிகள்- கள்ளுமிடாக்கள்-சபராசெய்வதில் மணியகாரன் தொப்பைகரையவந்திறங்கி இருக்குங்காலத்தில் தாசில்தார் தப்பேதாரனுக்குச்சொல்லுகிறது.

விருத்தம்.

இணக்கமாயிருக்குந்தப்பேதாரனேஇக்கணத்தில்... ... ... *
வணக்கமாயிருந்துகொண்டேமாயங்கள்மிகவேசெய்து ... ... *
நுணக்கமாய்க்கணக்குக்கேட்க நூறுதந்திரங்கள்சொல்லும் ... ... *
கணக்கனையிட்டுக்கொண்டுகடுகிநீயோடிவாராய்... ... ... ... *

ஸ்ரீ அ    தாசில்தார் நாடகம்.

வசனம்.

எப்போதும்நமக்கு இணக்கமாயிருக்கின்ற அஜீ தபேதார்வண க்கமாகமாத்திரம் நடித்துக்கொண்டு அநேகமோசங்கள்செய்துகண க்குகளைப் புரட்டித்திரிகிற கணக்கனையும், மணியக்காரனையும், சீக்கி ரமழைத்துவா.

தப்பேதாரன் சொல் வசனம்.

அச்சா ... ராஜ்-அர் ஓய் கிராமக்கணக்கர் தாசீல்தார்வந்திருக்கி ருர் இன்னம் என்ன பன்றீங்கோஓய் - ஜல்திவாங்கோ.

கணக்கன் தப்பேதாரனுக்குச் சொல் வசனம்.

தாசீல்தாருக்கு நடப்பிக்கின்ற மரியாதைக்காக இன்னஞ்சில குடிகள் தொகைகொடுக்க அட்டிசெய்கிருர்கள் இதோஅவர்களிடத் தில்தண்டிக்கொண்டு வருகிறேன் சற்றுநேரம்பொறு அப்பாலுங்கள் செலவுக்கும்வேணுமே-நல்லது-ஜல்தி-ஜல்தி-இதோவருகிறோமப்பா

பொதுவிருத்தம்.

திட்டத்துக்கென்றும்நாளைசெயுஞ்சமாபந்திக்கென்றும் ... ... *
விட்டிடுந்தரிசுக்கென்றும்விரும்பியகவுலுக்கென்றும் ... ... *
தட்டுகளறுத்துத்தின்னத்தொகைவகைசொலுங்கணக்குக் ... ... *
கட்டுகளுடனேகிராமக்கணக்கருமிதோவந்தாரே ... ... ... *

வசனம்.

குடிகளைப்பார்த்துத் திட்டத்துக்காகத் தாசீல்தார்வருகிருர்ஜமா பந்தியுஞ்சேரவந்தது தரிசுகம்மி செய்விக்கவேண்டும் கவுல்செய்வி க்கவேண்டும் அதற்காகச்செய்யவேண்டிய தர்பார்செலவுக்குஞ்சாப ராவுக்கும் வேண்டிஇருக்கிறதே கொடுங்களென்று மணியகாரனேடு சேர்ந்து வசூல்செய்து பாதிதின்றுபாதி உத்தியோகஸ்தருக்குக்கொ டுத்துக் கணக்குகளைப்புரட்டுகிற கணக்கர் கணக்குக் கட்டுகளுடன் வருகிறவிதங்காண்க.

கிராமக்கணக்கர்வருகிற

தரு-இராகம்-தோடி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கணக்கர்நாங்களே - கிராமக்-கணக்கர்நாங்களே.

அநுபல்லவி.

இணக்கமில்குடிகளை உருட்டுவோம்
வணக்கமாய்ச்சர்க்காரை மருட்டுவோம் (கணக்க)

[சரணங்கள்.]

ஊரையடித்து உலையில்போடவும்
உள்ளூருக்குள்ளேகுட்டிக் கலக்கித்தேடவும்
ஆரையாகிலும் அடுத்துக்கூடவும்
அவர்களைப்பின்பு கெடுக்கநாடவும்
அறிந்தவனென வகிலமதிக்கும்
சிறந்தவனெனத் தீயர்துதிக்கும் (கணக்க)

சாகுபடியைத் தரிசிற்சேர்க்கவும்
தரிசைச்சாகு படியிற்கோர்க்கவும்
போகமொன்றை இரண்டதாக்கவும்
புரட்டியிரண்டில் ஒன்றைநீக்கவும்
பொய்யைப்பேசிப் பொருளைத்தேடுவோம்
மெய்யைப்பேசி மிகக்கொண்டாடுவோம் (கணக்க)

ஆஜரிருக்கும் குடிபோத்தியென்னவும்
ஆஜரெனவே பாரிபயப்பன்னவும்
மாஜர்கொடுக்கப் பலதைத்துன்னவும்
வஜாசெய்யவகை மிகவுமுன்னவும்
வஞ்சனைசெய்யவும் சூக்ஷிதொடுப்போம்
பஞ்சைபறுதி களையுங்கெடுப்போம் (கணக்க

கணக்கர்குடிகளுக்குச்சொல் - கொச்சகக்கலிப்பா,

தாசில்தார்வந்துவிட்டார்தரிசுதள்ளிக்கப்மி * செய்யப் ... ...*
பேசுமொத்தப்பணத்தையின்றுபேசாமல்தந்திடுங்கள் ... ... *
காசுதராப்பின்வர்ங்கில்காரியமோகெட்டுப்போம்... ... .... *
நேசமுடன்சொல்லுமென்சொல்நிஜமென்றுநம்புவீரே ... *

---

* துஅரூமுல்ஹு மேமீ உளவ உத்தரவினுல் அபன்சாகுபடி மோதாப்பா பகையரா சபாவணை பண்ணலான சங்கதியில் சபாவணைருசுவாலுல்கணக்கனைத்தள்ளும்படிபண்ணிச்சேத்தொடுக்கும்பத்தாதாருக்கு சபாவணைத் தொகையில் ஐம்பதரூபாய்க்கு மேற்படாதினும் கொடுக்கவேண்டியதைக் குறித்துப்போர்ட்டுக்கு சிபார்சு பண்ணலாமென்றுகட்டளை,

வசனம்,

அப்பாகுடிகளே நான்இரண்டாட்டில் ஊட்டின குட்டிபோலானேன் தாசில்தார்வந்துவிட்டார்இன்னஞ்சும்மாயிருக்கிறீர்கள்தரிசுகம்மிசெய்யவும், கவுல்கொடுக்கவும், பேசியிருந்த தொகையைச்செலுத்திவிடுங்கள் காசுக்குப்பால்மாறினால் காரியங்கெட்டுப்போகும் என்பேரில்பழிபோட்டுப் பின்னாலழவேண்டாம் உங்களுக்கு உபகாரமாகத்தான் சொல்லுகிறேன் சாபரா இனாமுதவியசெலவுகளும்வேறேயிருக்கிறது, மொத்தத்தைப்பேர்த்தெடுங்கள்-சீக்கிரம்-சீக்கிரம்-நேரமாச்சுது சிப்பேதாரன் காத்துக்கொண்டிருக்கிறான்,

குடிகளுங் கணக்கனுந் தர்க்கஞ்செய் - தரு

தன்னியாசி - அடதாளசாப்பு,

குடிகள்.

என்னகணக்கா பதைக்கிறாய் - எம்மை
எந்நேரங்காசுக்கு வதைக்கிறாய்
தின்னச்சோறில்லாமல் காலங்கழிக்கிறோம்
திவாணத்துக்கிஸ்தி கட்டமிழிக்கிறோம் (என்ன)

கணக்கன்,

குடிகளேயிதுசொல்லல் ஆகுமோ- பணங்
கொடுக்காவிட்டால்விட்டுப்போகுமோ
கொடுப்பதேவெள்ளா ழனுக்குவழக்கமாம்
கெடுப்பதேகணக்கனுக் கேற்றபழக்கமாம் (குடிக)

குடிகள்,

இடத்தரிசுக்காகக் கொடுத்தோமே - அதை
இசையும்படிசெய்ய அடுத்தோமே - அந்த
நடத்துவழக்குநாம் தொடுத்தோமே - சமு
சாரத்தையுந்தெருவில் விடுத்தோமே
தட்டிக்கொண்டுபணம் தாட்டோட்டம்நீசெய்தாய்
தரிசுக்காட்டில்மாடு மேய்ந்ததென்றுங்கொய்தாய் (என்)

கணக்கன்,

திடத்திலேவெகுசெல வாச்சுது - ஹேட்
சிரஸ்தாவுக்குங்கொஞ்சம் போச்சுது - அவ
ரிடத்தினாலேகவுல் வாய்ச்சுது - இன்னம்
உணுமக்குஇச்சைப் பேச்சிது

இருக்கட்டுமிப்போது ஏதாகிலுங்கொடும்
வரிக்கட்டுந்தாசிக்குக் கவுலையாகிலும்விடும் (குடிக)

குடிகள்,

இதற்குத்தானோலஞ்சம் வாங்கினாய் - களத்தில்
எத்தனை தவசங்கள் கோங்கினாய் - இந்தச்
சதிசெய்யவோஎம்மைத் தாக்கினாய் - கொஞ்சம்
சர்க்காரில்தலையெடுத்தோங்கினாய்

சாக்ஷிசொல்லியேதோ சாதிக்கிறேனென்றாய்
தாசில்தார்க்கென்று சலிக்கவாங்கித்தின்றாய் (என்ன)

கணக்கன்,

வீணாகவேகெட்டுப் போகிறீர் - உங்கள்
வீம்பினாலேநஷ்டம் ஆகிறீர் - ஒரு
சாணான்பனையில் உழுகிறீர் - அதற்குச்
சாக்ஷிசொல்லச்சொல்லி அழுகிறீர்

தந்தோம்தந்தோமென்றீர் தந்ததொன்றுமில்லை
வந்தஜமாபந்தி யாலுமிகத்தொல்லை (குடிக)

குடிகள்,

இந்தப்படிசொல்லி மிரட்டுறாய் - எருது
எருமைவரியென்றும் உருட்டுறாய் - உன்
சொந்தச்செலவுக்கும் சுருட்டுறாய் - சும்மா
தோட்டஜாஸ்தியென்றுவெருட்டுறாய்

தொலைத்ததும்போதாமல் தொந்தரைகொடுக்கிறாய்
கலைத்துச்சிலரைக்கூட்டிக் கலகங்கள்தொடுக்கிறாய் (என்)

கணக்கன்,

கலகஞ்செய்ததென்ன சொல்லுங்கள் - யாதும்
கணக்கனில்லாமலே வெல்லுங்கள் - நூறு
சலகைநெல்லாகிலும் நல்குங்கள் - ஒன்றும்
தரமாட்டோமென்றென்னைக்கொல்லுங்கள்

தந்தாலிப்போதாசில் தாரருக்காகுது
சொந்தத்திலுமெங்கள் கைக்கூசேபோகுது (குடிக)

குடிகள்,

குண்டையெருதும்விற் றாச்சுது - நெல்லடிக்
கோமுட்டிக்குங்கட னாச்சுது - அதில்

ஏண்டகோர்ட்டில்வழக் காச்சுதே - தீர்த்து
காடுந்தோட்டமும்ஏல மாச்சுது
தண்டிஅண்டையசல் தந்தகடனிது
தண்டத்துக்கழுகிறேம்கொண்டுபோஎன்வாது (எண்ண)

கணக்கன்,

தாசில்தாரையிக அடுக்கிறேம் - உமக்குத்
தயவுசெய்யவகை தொடுக்கிறேம் - தரும்
[illegible]ப்பலருக்கும் கொடுக்கிறேம் - உங்கள்
காரியங்களெல்லாம் முடிக்கிறேம்
கனமானதாசில் தாரூராருக்கு
அநியாயஞ்செய்யும் அதைத்தடுப்போருக்கு (எண்ண)

பொது விருத்தம்;

மணியகாரன்கணக்கன்மதியிலாக்குடிகளுக்குத் ... ... ... *
தினைசெய்வார்போல்நடித்துத்தொந்தரைசெய்துவாங்கும் ... *
பணமதிற்சேரவேண்டும்பங்கேற்பாடதைக்குறித்துத் ... *
துணிவொடுவாதுசெய்யத்தொடங்கினார்வழியில்தாமே .. ... *

வசனம்,

மணியகாரனும், கணக்கனும், விவகார ஞானமில்லாக்குடிகளை மிரட்டி வசூல்செய்தபணத்தில் பங்குபிரியாமல் கலகப்பட்டு வாது செய்கிறவிதங்காண்க,

மணியக்காரனுங் கணக்கனும் தர்க்கஞ்செய் கிறகண்ணி.

திபதை - நீலாம்புரிராகம்-ஆதிதாளம்,

கணக்கன்,

நயத்தாலும்பயத்தாலும் - குடிகளைமிரட்டியே
நான்வாங்கியபணத்தில் மணியகாரா - எதும்
பயமில்லாமலிப்போ - பங்குக்குவந்தாயே
பாத்தியமுனக்குண்டோ மணியகாரா

மணியகாரன்,

வந்தபணத்தில்நீ - மாத்திரமேயெடுத்து
வாயில்போட்டுக்கொண்டால் அடாகணக்கா - உனக்குத்
தொந்தவிறவருமென்று - தோற்றவில்லையே இதைத்
தினையட்குத்தெரிவிப்பேன் அடாகணக்கா

கணக்கன்,

தரிசுசாகுபடி - சங்கதியிலறிக்கை
  தாலூக்காவுக்கெழுத  மணியகாரா - ஊரில்
தட்டிக்கொண்டாய்நீயே - தந்திரஞ்சொன்னவனுக்குத்
  தந்திரொன்றுமில்லை  மணியகாரா

மணியகாரன்,

தட்டிக்கொண்டதைமூட்டை - கட்டிக்கொண்டேனேநான்
  தாசில்தார்சாப்பிட்டார்  அடாகணக்கா - அவர்க்கே
கொட்டிக்கொடுப்பதற்குக் - குடிகளழுகிறார்
  குசோத்தியஞ்செய்யவந்தாய் - அடாகணக்கா

கணக்கன்,

சாப்பிட்டுனக்கும்அந்தத் - தாசீல்தாரர்வேண
  சகாயஞ்செயவில்லையோ  மணியகாரா - வீட்டில்
தீப்பட்டசங்கதி - தனிலுன்னைவிடுவிக்கச்
  சிரமமெடுத்துக்கொண்டார்  மணியகாரா

மணியகாரன்,

கிஸ்தித்தொகைக்குக்கெடு - கொடுப்பதற்காகவும்
  கேட்டதொகைகொடுத்தேன்  அடாகணக்கா - மிகு
அஸ்தலாஹுவித்தை - அறிந்தசராபுக்கும்
  அஞ்சாறுதந்தேனே  அடாகணக்கா

கணக்கன்,

சும்மாகொடுத்தாயோ - ஊரில்வருலான
  தொகையைச்செலுத்தினாய்  மணியகாரா - சாரபு
எம்மாதிரியுமான - குத்தவெட்டுரூபாயை
  எடுத்துக்கொள்ளவில்லையோ  மணியகாரா

மணியகாரன்,

நகதிகுமஸ்தாவுக்கு - நாலஞ்சுரூபாகையில்
  நானல்லவோகொடுத்தேன்  அடாகணக்கா - மேலும்
தகுதியற்றதப்பே - தாரர்க்கும்கொல்லர்க்கும்
  தானைவார்த்ததுண்டே  அடாகணக்கா

கணக்கன்,

வல்லமையாய்க்குமஸ்தா - கிஸ்திபந்திஜாஸ்தி
  மறைப்பதற்கல்லவோ  மணியகாரா - கேட்ட
கொல்லன்தப்பேதாரன் - குறுக்கேவிழாமலே
  கொடுத்தாயதற்கென்ன  மணியகாரா

மணியகாரன்,

தண்டல்டாப்புதனைத் - தனிக்கைசெயுங்குமஸ்தா
தனக்குங்கொஞ்சமளித்தேன் அடாகணக்கா - வந்த
தண்டுசரபரா - தன்னில்நூறுரூபாய்
சகலருஞ்சாப்பிட்டார் அடாகணக்கா

கணக்கன்,

தனிக்கைசெய்யுந்தண்டல் - தன்னில்மாறுபாட்டை
சமாளிக்கவேகொடுத்தாய் மணியகாரா - தண்டின்
கணக்கிலாடுகோழி - கொடுத்தஎளியோர்க்கனாக்
சேர்ந்ததுண்டோ மணியகாரா

மணியகாரன்,

செய்யும்ஜமாபந்தித் - திட்டச்சர்பராச்
செலவைநீயறியாயோ அடாகணக்கா - மட்டில்
நெய்பால்தயிரரிசி - பருப்புக்காய்கறிகளும்
நேர்ந்தபடிகொடுத்தேன் அடாகணக்கா

கணக்கன்.

கொடுத்தேனென்பதெல்லாம் - குடிகள்சொத்தல்லால்நீ
கொடுத்துக்கெட்டுப்போனையோ மணியகாரா - அவனை
அடுத்துஐந்நூறுதந்து - மணியம்பெற்றுக்கொண்டாயே
அதைக்காப்பாற்றக்கொடுத்தாய் மணியகாரா

தப்பேதாரன் தாசில்தாருக்குச் சொல் வசனம்.

கணக்கர் - மணியக்காரர்கள் - இதோவந்தாங்கோசாமி.

தாசில்தாரர் - சொல்வசனம்.

இந்நேரமென்ன.

தப்பேதாரன் - சொல்-வசனம்.

கணக்கனைக்கூப்பிட்டால் சீக்கிரம்வருகிறதில்லை தர்பார்செலவுக்காக ஆளுக்கிவ்வளவென்று கொடுக்கிறதொகையைக் கொடுக்காமல் தகரார்சொல்லுகிற குடிகளுடனேயும் வந்ததொகையில்பங்கேற்பாட்டைக்குறித்து மணியகாரனுடனேயும், இதுவரையில்சண்டைபோட்டுக்கொண்டிருந்தான் சாமி.

தாசில்தாருக்குக் கணக்கன் சொல்-வந்தனம்,

தெண்டம்சுவாமி!

தாசில்தார் - சொல்விருத்தம்.

என்னடா கணக்கா இந்த அயனிலெவ்வளவு கம்மி ... ... ... ... *
முன்னேயபேரீஜென்ன மோதர்பாபாஜேபாயில் ... ... ... *
பன்னிரெங்காயம்நக்கி பரவுபுல்வகையராவில் ... ... ... *
என்னதான்கம்மியாச்சு எங்கடாகிட்டச்சிட்டா ... ... ... *

வசனம்.

என்னகாணும் ஆடெடுத்த கள்ளன்போலேமிழிக்கிறாய் விநயஞ்சொல்லி மாயப்பூனைவேஷங்கொண் டேதோநடிக்கிறாய்ஆகட்டும் பிராக்குபேரீஜில் நாளதுக்கு அயனில் எவ்வளவு கம்மி மோதர்பாபாஜேபாயில் எவ்வளவுகம்மி காயம்நக்கிபரவ்புல்லுவகையராவிலெவ்வளவுகம்மி ஜாஸ்தி அயனில் எவ்வளவாகும் மோதர்பாபாஜேபாயில் எவ்வளவாகும் கணக்காஜர்படுத்து கிட்டச்சிட்டா எதோ;

கணக்கன் - சொல்வசனம்.

என்னசுவாமி தாங்கள் காலாலே காட்டினதெல்லாங்கையாலே செய்குவோம் இதோகிட்டச்சிட்டா ஆஜர்படுத்திஇருக்கிறேன் சுவாமி, என்னஒப் போத்திபாபத்தில்கம்மி - ரூபாய் - ௱உ௰ - பராரிபாபத்தில்கம்மி - ரூபாய்-உ௱ - நாதார்பாபத்தில் - கம்மி-ரூபாய்- ௱ரு௰ - இப்படிக்குப்பராரிகம்மியாய் எழுதிக்கொடுக்கிறீர்கள்போத்தியாய்ப்போன குடிகளிடவாரசுதார்களில்லையா, இப்போது எழுதிவைத்த குடிகளெல்லாம் பராரியாய்ப் போயிருப்பது நிஜமா நல்லது நாளைக்குத்தணிக்கிசெய்கிறோம், ஆஜர்குடிகளைப்பராரியென்றும், தார்குடிகளை நாதார் என்றும், நீயும் மணியகாரனுஞ்சேர்ந்து புரட்டுக்கணக்குகள்எழுதி உங்கள்கையெழுத்துப்போட்டுக் கணக்குக்கொடுத்திருக்கிறீர்கள் நாளையதினம்தணிக்கிசெய்து தக்கபுத்திகல்பிக்கிறோம்;

கச்சேரிகலைந்துபோனபின்பு தாசில்தார்

இறங்கி இருக்கிற இடத்துக்குக் கணக்கன்மணியகாரன்போய்ரகசியமாய்ச் சொல்லிக்கொள்ளுகிற வசனம்.

தாங்கள் எப்படியாகிலும் எங்களைக்காப்பாற்றவேணும் கணக்குத் தணிக்கிக்கு வைத்துக்கொண்டால் கொஞ்சம் ஏற்றக்குறைச்சலாகும் கிராமதமுதாய்ப்பு நானாவிதமுமிருக்கும் நாளையதினம்விசாரணைக்கு எங்களைச்சார்ந்த பத்துமாத்துபர்குடிகளால் நீங்களெழுதி வைத்தகணக்குச்சரிதானென்று என்னும்படி சொல்லுவிக்கிறோம் நம்முடைய கணக்குப்படிக்கு - ௬௱எ௰ - ரூபா - என்கிராமத்துக்கு

# தாசில்தார் நாடகம்.

இவ்வருஷத்தில் கம்மிபண்ணிக்கொடுத்தால் தங்களுக்கு அனாவரிசை- கைகு-ரூ ா காணிக்கைவைததுப் பாதபூஜைசெய்கிரோம் நாளையதி னங்கச் சேரியில் குடிகள் எல்லோரும்வந்து சேர்வதற்குள்ளாக நாம் ஆஜர்செய்கிற பத்துக்குடிகளைமாத்திரம்வைத்துக்கொண்டு கணக்கு ப்படிக்குப் பைசல்செய்யவேணும் ஜாஸ்தியும் ஷெ கம்மிக்குச்சரிக் கட்டும் பிராக்குக்கு நளைதுக்குக்கம்மியாகாது தாங்களதற்குயோச னைசெய்யவேண்டியதில்லை.

தாசில்தார் - சொல்- வசனம்.

நீங்கள் யோக்கியராகக்காணுகிறது நீங்கள் சொன்னதொகை யை இப்போதே ஜாக்கிரதை செய்துவிடவேணும்.

கணக்கர் - மணியகாரர்சொல்- வசனம்.

ஆகட்டும்சுவாமி நாங்கள் பின்னாலே வசூல்செய்துகொள்ளுகி ரோம் முடிப்பிலிருந்து எடுத்தாவது இப்போதே சாக்கிரதைசெய் துவிடுகிரோம்.

பிராக்கு பேரீஜுக்குக் குறைபப்படாது - கணக்குஎழுதுவித் து மாமூல்படிக்கு, நடக்கப்பட்ட காரியங்களெல்லாஞ் செய்தால் தொந்தரவு இல்லாமலிருக்கும் மிச்சத்துக்கு நானிருக்கிறேன் நீங்க ள்பயப்படவேண்டியதே இல்லை.

அந்தச்சமயத்தில். கணக்கன்சொல் வசனம்.

என்கிராமத்தில் - குப்பாண்டை கவுண்டன்-க. கறுப்பணகவு ண்டன்-க. இந்த இரண்டுபேரும் போக்கிரிகள்; இவர்கள் மானியபூ மிகளை ஏராளமாய் இனும்தார்களுக்கு வார்சாகுபடிசெய்துகொண்டு தங்களுடைய் பட்டாபூமிகளில் சிலதுகளைப்பராரியாத்தரிசுபோட்டு க்கொண்டும், அதைத் திசர்குடிகளுக்கு விலேவார்செய்யவிடாமலு ம், மேற்படிதரிசுபூமிகளைத் தாங்களே புல்மேய்த்துக் கொள்ளவே ணுமென்கிற எண்ணங்கொண்டு சாகுபடிஅரகத்துச்செய் துவருவதா ல்அவர்களை எஜமான்கள் அழைப்பித்துவிசாரணைசெய்யவேணும்,

தாசில்தார்-தப்பேதாரனுக்குச்சொல்-வசனம்.

ஜெ - தப்பேதார் - அந்தப்போக்கிரிகள் குப்பாண்டை கவுண் டன்-கறுப்பணகவுண்டனுக்குபுலாவ்.

இதோவந்தாங்கோசாமி.

தாசில்தார் வந்தகுடிகளுக்குச் சொல்வசனம்,

அடா என்னடா, போக்கிரிகளாயிருக்கிறீர்கள் உங்களுடைய பற்றுக்கட்டு பூமிகளில் நலமாயிருப்பதைமாத்திரம் உழுதமற்றதைத்தரிசுபோட்டுக்கொண்டு இனாம்பூமிகளைச்சாகுபடிசெய்துவருகிறதாகத் தெரியவருகிறது, உங்களுடைய பற்றுக்கட்டுபூமியை உங்களுக்கு பால்செய்வோம்பத்திரம்,

அதன்மேல் குடியானவர்கள் கணக்கனுக்குச்சொல்வசனம்,

என்னவோய் - கணக்கப்பிள்ளை தோளிலேயிருந்து செவியைக் கடித்தாற்போலக்கணக்கர் வஞ்சனைக்கெல்லா முதற்பாதந்தானே நீட்டினமாத்திலேயே கூர்பூர்க்கிறாய் அநுகூல சத்துராதியாய் எங்கள்பாலிருந்தே கழுவாய்க்கலைக்கிறாய் - இனாம்பூமிஉழுகிற சங்கதி எஜமானுக்குத் தெரிவித்துவிட்டீர் - ஆகிலும் பற்றுக்கட்டு பூமியில் சாகுபடிசெய்ததுபோகத் தரிசாயிருக்கிறபூமிவஜாசெய்வித்துக்கொடுத்தால் - ருய - ரூபாய் - உரு - ரூபாய்- விழுக்காடுதீர்வைத்தொகையைக் கொடுத்துவிடுகிறோம் அதிலும் நீரும் தாசில்தாரும் எப்படியாவது சரிப்படுத்திக்கொள்ளுங்கள்,

தொப்பைக்கூத்தாடி சபையாருக்குச் சொல்வசனம்,

ஊர்க்கணக்கரும், மணியகாரரும், சிலகுமஸ்தாக்களும், தாசில்தாரரும், எனிந்தப்படி லஞ்சம் வாங்குகிறார்கள், செங்கோல்கோணினால்எங்குங்கோணுமே தேசத்து நன்மை தீமை இராஜாக்களையேசாருமல்லவோ, பூர்வதுரைத்தனங்களில் இரண்டுவராகன் சம்பளக்காரன் இருநூறுக்குமேலே சம்பாதிக்கிறது - இருநூறுசம்பளக்காரன் இரண்டாயிரஞ்சம்பாதிக்கிறது - இதுபிரசித்தமாயிருந்தது, அந்தத்துரைத்தனம்போய்க் கம்பனிவசமானபோது முன்துரைத்தனத்தில்ப்பழகின பேர்களே சிரிஸ்தாமுதலாகிய அலுவல்களுக்கேற்பட்டார்கள், அவர்களுடைய அபிப்பிராயப்பிரகாரம் உத்தியோகஸ்தருக்குக்கொஞ்ச சம்பளங்களே ஏற்பட்டிருக்கிறது, கணக்கன்மணியகாரனுக்குச் சர்க்காரிய ஏதோசொற்பவருமான மேற்படுத்திவிட்டார்கள், அதையவர்கள் ஒருவருமானமாக எண்ணாமல் தங்களுடைய குடும்பசம்ரக்ஷணைக்காகவும், சுபசோபனங்களுக்காகவும், தர்பார்செலவுகளுக்காகவும், கிராமத்தில் மாறுபாடுகள் சபாவனிகள் விதியில்லாமல் செய்யத்தலைப்படுகிறார்கள், இந்தப்பிரகாரம் குமஸ்தாக்களுக்கும் மிகவும் குறைந்தசம்பளங்களாகையால் அவர்களிலும் சிலர்

மேல்வருமானஞ் சம்பாதிக்கத் தலைப்படுகிறார்கள், தாசில்தார்களுக்கும் அடிக்கடி வெளியில் போகவேண்டியகாரியங்கள் நேரிடுகிறபடியால் அவசியம் இரண்டு சுவாரிகள் இரண்டுசுயம்பாகி பரிசாரகர்களைவைத்துக்கொள்ளவேண்டி யிருப்பதாலும், அவருடையபெரிய அந்தஸ்துக்குத்தக்க மற்றச் செலவுகளுமிருப்பதாலுஞ் சிலருக்குச் சம்பளம் போதாமலிருக்கிறபோது இல்லாமையானது கொஞ்சம் பிரயோஜனத்தின்பேரில்மனதைச்செலுத்துவிக்கின்றது, அதனால்அநேக அக்கிரமங்களுக் கிடமுண்டாகின்றது, குருநின்றுகொண்டே பெய்ந்தால்[illegible]ன் ஓடிக்கொண்டேபெய்வானென்பதுபோலஎஜமான்அந்தவேலைக்காரம்பித்தால் மற்றஎல்லோரும் ஆரம்பிக்கின்றார்கள் உற்றதுசொன்னால் அற்றதுபொருந்தும், இவர்களுக்கெல்லாம்நல்ல சம்பளங்களேற்படுத்திக் கல்வியைவிர்த்தியாக்கித் தக்கவர்களைவைத்து அந்தத் தப்பிதங்களைக்குறித்து நல்லகண்டனை தண்டனைசெய்துவந்தால்லஞ்சமும் அக்கிரமங்களும்பறக்காதா; (தப்பேதாரன்) அடே பாண்சோத் - என்னடா தலையெல்லாம் அரட்டலாய்ப்பேசுகிறாய்-ஆனைநிழல்யார்க்கத் தவளைகலக்கிறாற்போலிருக்கிறது, கொல்லத்தெருவில் ஊசிவிற்கலாமா, நரிவாலைக்கொண்டா கடலாழம்பார்க்கிறது, உன்வார்த்தையை யாரொடுத்துக்கொள்ளப்போகிறார்கள், சம்பாதித்துப்பிழைக்கிற எங்களுக்கு பாஞ்சோத்-நீகோடாலிக்காம்பு குலத்துக்குக்கேடு என்பதுபோலானாய் வாயைமூடிக்கொண்டிரு,

பொதுவிருத்தம்,

இட்டத்தின்படிகணக்க ரிசைந்திடுமணியகாரர்... ... ... ...*
கொட்டியேகொடுத்தகாசால் கூடவேகொண்டுபோன... ... ...*
பெட்டியைநிரப்பிக்கொண்ட பிறகந்தத்தாசீல்தாரர்... ... ...*
திட்டமேஇதுதானென்று திரும்பிவந்திட்டார்தாமே... ... ...*

வசனம்,

கணக்கராலும், மணியகாரராலும், கொட்டிக்கொடுக்கப்பட்ட பணத்தினால் பெட்டியை நிரப்பிக்கொண்டு இதுதான் தாம் செய்யுந்திட்டமென்று எண்ணிக்கொண்டு பூரிப்புடனே கசுபாவுக்குத்தாசீல்தார் திரும்பிவந்தவிதங்காண்க,

பொதுவிருத்தம்.

சிறுகெண்டைகளைவாரா[illegible]மீன் தின்னவுமதனைவாளை... ... ... *
விறலுடத்தின்னுகின்ற விதமெனத்தாசீல்தாரர்... ... ... ...*
வறுமைபெருகுடிகளெய்த வலித்ததைவலிக்கவந்தார்... ... ... *
திறமிகுமாபந்திக்குச் சிரஸ்தாகச்சேரியாரோ... ... ... ...*

வசனம்.

கெண்டமீனை வரால்மீன்தின்ன, வரால்மீனை வாளைமீன்தின்பதுபோலக்குடிகளுடைய குடிகள்கெட மாறுபாடுகள்செய்து தாசில்தாரர் வலிக்கும் வகையெல்லாம் அறிந்து பறிக்கத்தக்க திறமுடையசிரஸ்தார கச்சேரியார் ஜமாபந்திக்கு வருகிறவிதங்காண்க;

ஜமாபந்தி கச்சேரியார் வருகிற-தரு.

இராகம்-மோகனம்- ஆதிதாளம்.

பல்லவி;

கச்சேரியாரும்வந்தார் - ஜமாபந்தி - கச்சேரியாரும்வந்தார் ... ✻

அநுபல்லவி.

பச்சைப்பந்தலும்போட்டு - பாங்காமுழக்கம்நீட
இச்சகமாய்த்தாசில்தா - ரெதிர்கொண்டேபோட(கச்சே)

[சரணங்கள்.]

கணயிகும்ஹெட் சிரஸ்தா - முனிஷிகளும்
கைதேர்ந்தஹெட் குமஸ்தா
தனிக்கைகட்குரிஜிஸ்டரில் தாக்கால்செய்யுங்குமஸ்தா
தப்பேதார்டலாயத்து சகலரும்வரதிஸ்தாய் (கச்)

அரிசிபருப்பு வெட்டி - விறகுவைக்கோல்
ஆவினெய்தயிர் மூட்டி
வரிசைகொண்டுவந்து வழங்காதவனைத்திட்டி
மாமூல்தாரத்தாசில் தாரனையுமுருட்டிக்(கச்)

கணக்கில்தப்பிதம் பிடிக்க - உடனேவந்து
கணக்கர்தொகைகள் கொடுக்க
வணக்கமாகக்குடிகள் மணியகாரரடுக்க
மாறுபாடுகளெல்லாம் வகையாய்க்கண்டுபிடிக்க(கச்)

சிரஸ்தாதார் தாசில்தாரருக்குச் - சொல்விருத்தம்.

தாசில்தாரோஹுஜூரு தாக்கீதின்படியேஊரில்... ... ... ...✻
காசுகள்பறித்துத்தின்னுங் கணக்கனாமணியகாரரை ... ... ✻
மோசங்கள்நடந்ததாக முறையிடுங்குடிகள்தம்மை ... ... ✻
ஆஜர்செய்வித்திருந்தால் அதையெமக்கறிவிட்டிடு ... ... ✻

வசனம்.

தாசில்தாரரே, அஜூருக்கு தாக்கீதுபிரகாரம் - கணக்கர் - மணியகாரர்-தலையார் - குடிகள் இவர்களை ஆசர்படுத்தியிருக்கிறீரா,

தாசில்தார் சிரஸ்தாதாராருக்குச்சொல் - கொச்சகம்.

ஜாக்கிரதையாய்ப்பத்துத் தாக்கீதுகளையனுப்பிச் ... ... ... *
சீக்கிரமாயெழுந்துவரத் திட்டங்களுஞ்செய்தேன் ... ... ... *
போக்கிரிகள்சிலர்வந்தார் போகமற்றப்பேர்க்குவழி ... ... *
பார்க்கிறேன்ஆஜர்செய்யப் பத்துநாழிகைக்குள்ளே ... ... ... *

வசனம்,

தாக்கீதெழுந்தமாத்திரத்தில் கிராமங்களுக்குத் தாக்கீதுகள்மேல் தாக்கீதுகள் அனுப்பியும் சில கிராமக்குடிகள்மாத்திரம் ஆஜராயிருக்கிறார்கள் மற்றப்பேர்க்கு வழிபார்க்கிறேன் பத்துநாழிகைக்குள் வந்துசேருவார்கள்.

சிரஸ்தாதாரர் தாசில்தாருக்குச்சொல் - வசனம்.

நீரிந்தத்தாலூக்காவில் வெகுநாளாயிருப்பதால் தாக்ஷிணியத்துக்குட்பட்டிருக்கிறீர் தாக்கீதைத் தந்திரத்தில் கட்டிவிட்டிருக்கிறீர் இந்தப்படி நீர் அசட்டைசெய்த சங்கதி துரைக்குத்தெரியப்படுத்தப்படும் அதற்குவேண்டிய ஜாக்கிரதைசெய்யும்,

தாசில்தார் சொல் வசனம்,

அப்படியொருநாளும் அசட்டை செய்திருக்கமாட்டேன் - இதோ இன்றைக்குள்ளாகவே சகலகிராமஸ்தரும் வந்துசேரும்படி வேண்டியசாக்கிரதைசெய்கிறேன் தங்களுடையமனதின்படி நடந்துகொள்ளுகிறவனேயொழிய வேறல்ல,

தாசில்தார் தப்பேதாருக்குச்சொல் வசனம்,

அஜீதப்பேதார் சேவகர்மேல் சேவகனைஅனுப்பி- ஒசுவர் ஒமுர்தார்-ஒமாதர்ச்சோத் - காமவாலேக்கு-ஜல்தி ஆநேக்கு - தாக்கீதுசர்கு ஜல்தி - ஜல்தி - சிரஸ்தேதார் புக்கார் கர்தாஹே துமக்கு அக்கல் நை கியா-ஜல்தி-ஜல்தி,

தபேதாரன் சொல் வசனம்,

அச்சாமகராஜ் - மைகியாகரும் - ஓ படவே - மாதர்ச்சோத்- லோஹூயேநய் - அரேகாசிம் - அரேகுலாமல்லி - அரேமதார்சா- அரேகுலாமைதர்-அரேதிம்மாரவுத்-அரேப்பாபிகா - நீங்கள் இந்தக்ஷணமே ஆலசியமில்லாமல் கிராமஸ்தரைச் செருப்பால்அடிச்சுக்கழுத்தைப்பிடித்து நெட்டிக்கொண்டு வந்துவிடுங்கள் மூலராஜா பார்க்க வேண்டாம்-ஜல்தி-ஜல்தி,

### கிராமத்தில் சேவகர் போய்ச்செய்யும்-ஆரவாரம்,

அடேஎன்னவோய் புத்தியில்லே சோறுதிங்கிறீர்களா என்னுடைகள் அப்பன் வந்து இறங்கி இருக்கிறான் அடேபடவே-தோட்டி அந்திசானிக் கணக்கனெங்கே - மணியகாரனெங்கே - தகார் சொல்றாங்களே குடிகள் அந்தமாதர்ச்சோதுகளெங்கே-இப்போது ஜூத்துமேல் உதைச்சுக் கொண்டுபோறேன் - ஜல்திநடவோய் - அடஎன்னவோய்மஜாக்பண்ணுரிங்கோ ஜல்திபுறப்படு,

### குடிகள் வசனம்,

அப்பாபுறப்படுகிறோம் சமையல்செய்துகொள்ளும் அல்லது கோமுட்டிவீட்டில் சாப்பிடும்,

### சேவகன் - வசனம்,

என்னவோய் கோமுட்டிவீட்டில் - கோழியேது முட்டையேது- சாராயக்கடைக்காரன் வீட்டில்சொல்- நல்லது - அப்படியேஆகட்டும், அடஎன்னவோய்-கிராமத்துக்குப்போனுக்கா ஒரு ஆட்டுக்குட்டிக்குக்கூடக் கதியில்லே யென்னுசொல்றாங்கோ இப்போது-அகுர்ஜமேதார் தப்பேதார் - டலாயத்துகள்வந்திருக்கிறாங்கோ நல்லகுட்டியாய்ப்பார்த்துக்கொண்டாங்கோ அட என்னைப் கணக்கன்-மணியகாரர் உங்களுக்குச் சேனசேனே செலவுகள் வந்திருக்குது-குமஸ்த்தாக்களுக்கு - தபேதாரர்க்கு - டலாயத்துக்கு-கடைசியில எங்களுக்கு இனும்கொடுக்கவேணும் அடுப்பண்டை புதைச்சுவைச்சிருக்கிற மொந்தையை எடுத்துகினு பையிலேபோட்டுகினு வாங்கோஒப்புறப்படுங்கோ,

### பொதுவிருத்தம்.

இராவணாதிகளால்தேவர் இமிசைப்பட்டதுபோலிப்போ ... *
பிராமணராயராலே * பேதைகளாகிவாடும் ... ... ... *
கிராமஸ்தர்ஜமாபந்திக்குக் கிடுகிடென்றேநடுங்கி... ... ... *
வராகனைக்கட்டிக்கொண்டு வணக்கமாய்வருகின்றாரோ... ... ...*

### வசனம்,

தேவர்கள் திரேதாயுகத்தில் இராவணாதி ராக்ஷதரால் இமிசைப்பட்டதுபோலக் கலியுகத்தில் பிராமணராயர்களால் நானாவித இமிசைக ளடைந்துநொந்து வாடுங்கிராமஸ்தர் மார்புவிற்ற வராகன்-

---

* ௲அ௱௫௰௫ நவம்பர்மீ ௩௰ உத்தரவின்படி ஜில்லாக்களில் சர்க்கார் கணக்குகளில்மராட்டபாஷையை உபயோகப் படுத்தாமல் எடுத்துப்போட்டுத் தேசபாஷை வழங்கச்செய்யப்பட்டன,

சோளம்விற்ற துட்டு - செட்டிக்குப் பாடியிலுள்ள-பால்-நெய்-தயி ர்-தோட்டத்திலுள்ள வாழையிலை-வாழைக்குலை - காய்கறிகள்-விறகு வைக்கோற்சுமைகளோடு வருகிறவிதங்காண்க,

கிராமஸ்தர் - வருகிற - தரு-இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

கிராமஸ்தரெல்லோரும்வந்தார் - ஜமாபந்திக்குக்
கிராமஸ்தரெல்லோரும்வந்தார்

அநுபல்லவி,

பிராமணருக்குப்பாத பூசைகளும்பண்ணப்
பிரியாதுகளைச்சொல்லிக் கொண்டவரிடம்நண்ணக்(கிராம)

[சரணங்கள்.]

பசுமாடுகளிட பாலையெல்லாங்கறந்து
பால்நெய்தயிர்க்குடம் பதித்துக்கொண்டுவந்து
குசவர்பானைசட்டி கூடைகளிற்சுமந்து
கொள்ளைவாழையிலை குலைகளுடன்விரைந்து (கிராம்)

சுப்பராயகவண்டன் சுப்பிரமணியகவண்டன்
சொக்கலிங்ககவண்டன் சோலைப்பகவண்டன்
குப்புமுத்துகவண்டன் குமாரசாமிகவண்டன்
குழந்தைகவண்டன்தில்லைக் கோவிந்தகவண்டனும் (கிராம)

தள்ளாதகிழவர்கள் தடிகள்கையிற்பிடித்துத்
தலைமேல்விறகுசுமை சலிக்கும்படியெடுத்துக்
கொள்ளுப்பிரிங்கித்தடி கொண்டு களத்தடித்துக்
குள்ளன்சுமந்துவர உள்ளந்துடிதுடித்துக் (கிராம)

தாசில்தாருக்குத் தப்பேதார்சொல் வசனம்,

மகராஜ்- நம்முடைய ஜவான்கள் எல்லாக் கிராமஸ்தரையும் அழைத்துக்கொண்டு வெகுவிஸ்தாரமாக - அரிசி-பருப்பு - கொள்ளு-காய்கறிகள்-பால்-தயிர்-பழங்கள்- இலைக்கட்டுகள் - வைக்கோற்சுமைகள் - விறகுசுமைகளுடன் வந்துட்டாங்கோ,

தாசில்தார் சொல் வசனம்,

அச்சா :- அந்தச்சாமான்களையெல்லாம் உக்கிராணத்தில் சேர்த்துவிடு அவர்களைப் பத்துமணிக்குச் சிரஸ்தேதார் கச்சேரியில் ஆஜர்படுத்து,

பொது விருத்தம்.

அரியபட்டா கொடுக்கு மந்தவேளையிற் கலெக்டர் ... ... ... *
துரைவருமுன்னதாகத் தொடர்ஜமாபந்திதன்னைப் ... ... ... *
பரிவுடன்பைசல்செய்யப் பாரியகிராமமெல்லாம் .. ... ... *
விரைவொடுசிரஸ்தாதாரர் விசாரணைசெய்கின்றாரே ... ... ... *

வசனம்.

பட்டாபடுவாடா செய்கிறசமயத்தில்மாத்திரம் துரைவருவாரா கையால் அவர்வருகிறதற்கு முன்னதாகவே ஜமாபந்தி பைசல்செய்யு ச் சிரஸ்தாதார் குடிகளுடைய தகரார் தகரீர்விசாரணைசெய்யத்தொ டங்குகிற விதங்காண்க.

தாசில்தாருக்குச் சிரஸ்தாதார்சொல்-விருத்தம்.

சத்தியமெனக்கணக்குத் தரும்தாசீல்தாரேகேளும் .. ... ... *
செத்தவர்தம்மில்நூறு தேசம்விட்டோரில்நூறு ... ... ... *
சுத்நாதாரிநூறு தொகையென்றுகாட்டவந்தீர் ... ... ... *
இத்தனைகம்மியென்றால் எவர்கள்தான்நம்புவாரே ... ... ... *

வசனம்.

என்னஅய்யா தாசில்தாரரே, தாவுதப்பிக் கிணற்றிலேவிழுந்த தோ, போத்தியில்நூறு - பாரரியில்நூறு - நாதாரியில்நூறென்று மனதுக்குகந்தபடி சர்க்காருக்கு நஷ்டம்வரத் தக்கதாகக் கணக்கில் கம்மி எழுதுவித்தீர் இதையார்தான் நம்புவார்கள், ஒருபோதும்நிச மென்றுநாம்நம்பவேநம்பமாட்டோம்இத்தப்படிதானுதாசீல்செய் கிறது - சோற்றிலே கிடக்கிற கல்லெடுக்கமாட்டாதவன் மூகவணைக் கல்லெடுப்பே னென்கிறதுபோ லிருக்குதே. *

சிரஸ்தாதாருக்குத் தாசில்தார்சொல் விருத்தம்.

கிராமங்கள்தோறுஞ்சென்று கிரமவிசாரணையுஞ்செய்து .. ... *
பாரரிநாதாரிபோத்தி பார்வையிட்டேயிருந்த ... ... ... *
சர்ாரதாகக்கணக்குக் கவனிப்பாய்ச்சித்தஞ்செய்தேன் ... ... *
பராமுகஞ்செய்யவேண்டாம் பாதுகாத்திடுவீர்தாமே .. ... ... *

---

* கஅடுகூ௵ டிசம்பர்௴ உகவ உத்தரவினால்தாசில்தாரர்கள் சர்க்கார் கிஸ்தி வசூல்செய்யாமல் நிலுவைபோட்டுவிட்டால் அதற்கா க அவர்களுக்கு அபராதம்போட்டு உத்தியோகத்திலிருந்து நீக்கப்ப டுமென்று பயப்படுத்துவதைவிட சர்க்கார்காரியங்களை அவர்கள்நட த்துகிறவிதத்தை மேலதிகாரிமேரில்போய்ப் பார்வையிடுகிறதுநன் மையெனக்கட்டளை.

வசனம்.

தாங்கள் செலவுகொடுக்கிறது புண்ணிமேலேகோலிட்டாற்போலிருக்கிறது, மேலும் வடிவான பாண்டம் கொட்டிதட்டிச்செய்யுங்குசவனுக்குப் பலநாளையவேலை தடிகாரனுக்கு அரைக்ஷணமென்பதுபோலிருக்கிறது, நானே அந்தக்கிராமங்கள்தோறுஞ் சென்று பேர்த்தி - பாரி - நாதார் - இவர்களைச்செவ்வையாய் விசாரித்துத்தான்கணக்குச்சித்தப்படுத்தி இருக்கிறேன் தயவுசெய்து எவ்விதத்திலுந்தாங்கள் காப்பாற்றவேண்டும்.

சிரஸ்தாதார் கணக்கர் மணியகாரருக்குச்சொல்வசனம்.

என்னடா கணக்கா, உருட்டுக்கும் புரட்டுக்கும்நானேகணக்கப்பிள்ளை மற்றப்பேரெல்லாம் அணிப்பிள்ளை கிரிட்பிள்ளை யென்கிறாய் இந்தக்கணக்குச் சரியாயிருக்கிறதா, அந்தப்படிக்குத் தஸ்தாவேஜு கொடுப்பீர்களா.

கணக்கர் மணியகாரர் சொல் வசனம்.

அப்படியே கொடுக்கச் சித்தமா யிருக்கிறோம்சாமி.

பொதுவசனம்.

இந்தச்சமயத்தில் ஒருகுடியானவன் சிரஸ்தாதாருக்குச்
சொல்லிக்கொள்ளுகிற வசனம்.

சுவாமி என்னுடைய மனுவைச் சற்றேஅங்கீகரிக்கவேணும் நானும் அந்தக்கிராமத்தில் குடியிருக்கிறவன்தான், இந்தக்கணக்கர்-மணியகாரர் முழுப்பூசினிக்காயைச்சோற்றில்மறைக்கிறவர்களைப்போலப் பரசுராமகவுண்டனைப் பாரியென்று கணக்கிலெழுதி ஐம்பது ரூபாய்-கம்மிசெய்வித்திருக்கிறார்கள், தாசில்தாரும், கணக்கர் - மணியகாரர் - தாக்ஷிண்யத்துக்கு உட்பட்டுச் செவ்வையாய்விசாரித்ததேயில்லை.

சிரஸ்தாதார் தாசில்தாருக்குச் சொல் வசனம்.

என்னஅய்யா தாசில்தாரரே, உம்முடையவிசாரணை வெகுநன்றுயிருக்கிறது, இந்தக்குடியானவன் சொல்வதைக்கேளும்.

தாசில்தார் சொல் வசனம்.

இவன் அவலைச்சாக்கிட்டு உரலையிடிக்கிறான் - ஏதோ விரோதத்தினால் இந்தப்படிச்சொல்லுகிறான், நானோவெகுவாய்க் கூடியமட்டும்விசாரணைசெய்து . மாஜரும்வாங்கி இருக்கிறேன் இன்னம்விசாரிக்கச்சொல்லி உத்தரவானால்விசாரித்து ரிப்போர்ட்டுசெய்கிறேன்.

குடியானவன் சொல் வசனம்.

இவர்கள் விசாரணைகளால் நீதிகிடைக்குமென்று எதிர்பார்ப்பது-மண்குதிரையைநம்பி ஆற்றிலிறங்குவதுபோல்தான், சுவாமி இது மாத்திரமல்ல, செங்கல்வராயசெட்டி செத்துப்போனான் - போத்தியென்று எழுதியது நிஜந்தான்; ஆனால் அவனுடையவார்ஸ்கள் நல்ல மாத்துபாரா யிருக்கிறார்கள், வார்ஸ்களுக்குத் தாக்கல்செய்யாமல் தாக்ஷிண்யத்துக்கு உட்பட்டு வஜாசெய்திருக்கிறார்..

சிரஸ்தாதார் சொல் வசனம்,

அடா இதையெல்லாம் ருசுசெய்கிறையா,

குடியானவன் சொல் வசனம்,

நானெப்படிருஜு செய்வேன் சுவாமி, கணக்கன் - மணியகாரன்- தாசில்தாரர் இவர்களுக்கு உட்பட்டுயாரும்சாக்ஷிசொல்லத்துணியமாட்டார்கள்,

தாசில்தார் சொல் வசனம்,

இந்தக்குடியானவன் மெத்தப்போக்கிரி - எப்போதும்பொய் சொல்லுகிறவன் இப்போது ஆஜரிருக்கிறகுடிகளைவிசாரித்தால்உண்மைதெரியவரும்,

சிரஸ்தாதார் கணக்கனுக்குச் சொல் வசனம்,

என்னடா நாதார் பாபத்தில்-௨௱-ரூபாய்வரைக்கும் சம்மிஎழுதியிருக்கிறாய் எங்கே அந்தக்குடிகள்,

கணக்கன் சொல் வசனம்,

இதோ ஆஜரிருக்கிறார்கள் சுவாமி,

சிரஸ்தாதார் குடியானவனுக்குச் சொல் வசனம்-

என்னடா உனக்கு - ௨௱ ரூபாய் தரிசு உனக்கு ஒருபோதும்விடமாட்டோம் நீ ஒப்புக்கொள்ளவேண்டும்,

குடியானவன் சொல்வசனம்,

என்பேரால் - ௨௱ - ரூபாய்க்குப் பட்டாமாத்திர மிருக்கிறதே.

---

* தகாவு(ஹு) ரு—பூ யிகூவ உத்தரவின்படிராக்கதீர்வைவற்பாடாயிருக்கிற சில்லாக்களில் ஜமாபந்தியில் குடிகளுக்குரியாயத்து பண்ணிக்கொடுக்கவேண்டியதாய்நேரிட்டால்காலஸ்திதியையும்குடியானவனுடைய ஸ்திதியையும் அவனுடைய எல்லாப்பூமிகளின் ஒட்டுமசூல்களையும் விலையின்தாரணையையும் யோசித்து நடத்தவேணுமென் றுகட்டளை.

ஒழிய அநுபோகமே இல்லாச்சக்தி குறைவினால்பூமிகளெல்லோரு க்கும்விட்டுவிட்டுத் தரிசுபூமியைமாத்திரம் சாகுபடிசெய்துவந்தே ன்; நாலுவருஷமாய் மழையில்லாமல் நான்மெத்த மெலிந்துபோ னேன் - கந்தாயபணத்துக்காகச் செட்டிஇடத்தில் முப்பத் ரூபாய் கடன்வாங்கியிருந்து அந்தச்செட்டி வட்டிக்குவட்டி ஏற்றி முன்சீபு கோர்ட்டில் வழக்காடி நூறு இருநூறு ஆக்கிக்கடைசியில்-மாடு-கன்று-வீடு- இதுகளெல்லாம்போட்டுக்கொண்டுபோய் விட்டார்கள், சுத்தநாதாரியாய்விட்டேன் - சுவாமிகள் காப்பாற்றவேணும்வேணுமானால் கணக்கர் மணியகாரனை விசாரித்துக்கொள்ளலாம்.

மற்றொரு குடியானவன் சொல் வசனம்,

சுவாமி - இவன்சொல்வதுசுத்தப்புரட்டு-அந்தப்படியெல்லாம்போட்டது இவன் அண்ணன்பெண்சாதி சொத்தேயொழிய இவன்சொத்தல்ல, அதைத்தன்னதென்றுசொல்லுகிறான் இவனே அந்தச்செட்டிக்குஉட்கையாயிருந்து செய்வித்தான்,

சிரஸ்தாதார் தாசீல்தாருக்குச் சொல் வசனம்,

அப்பா தசீல்தாரரே, இந்தக்குடியானவன் என்னஇப்படிசொல்லுகிறான்;

தாசீல்தார் சொல் வசனம்,

இவன் சுத்தப்போக்கிரி - நான்நன்றாய் விசாரித்திருக்கிறேன் நாதாரி என்பது எதார்த்தந்தான்,

இது மத்தியில் வேறொரு குடியானவன்
சொல்லிக்கொள்ளுகிற வசனம்,

ஐயா, என்னுடையபூமியில் வெள்ளவாரி அனாவாரியைபோய் விட்டது, இதைக்குறித்து - நான்-கணக்கன் - மணியகாரன் - தாசீல்தார் - இவர்களிடத்தில் வஜாசெய்விக்கவேணுமென்று சொல்லிக்கொண்டேன் நான்ஏழையானதால் அதை அவர்கள்காதில் போட்டுக் கொள்ளவில்லை,

சிரஸ்தாதார் தாசீல்தாருக்குச் சொல்வசனம்;

இதேன் நீர்போய்ப்பார்த்துத்தள்ளவில்லை;

தாசீல்தார் சொல் வசனம்,

இதைக்கணக்கன்-மணியகாரன் - தெரியப்படுத்தவில்லை, இந்தக்குடியானவன் சொல்லிக்கொண்டது எதார்த்தந்தான் அந்தக்கிராமத்துக்குப்போனபோது ஞாபகமில்லாமல்போச்சுது,

சிரஸ்தாதார் தாசில்தாரருக்குச்சொல்வசனம்,

என்னஅய்யா பனிப்பெருக்கிலே கப்பமேலோட்டநினைக்கிறீர் நீரிப்படிசெய்தால் எப்படி எளியகுடியானவன் கெட்டுப்போகிறானே இதைத்துரைக்குத் தெரியப்படுத்தினால் அவர் எவ்வளவுகோபியார் இப்போது ஒருகுமஸ்தாவை அனுப்பிப்பார்வையிடும்படி திட்டஞ்செய்யும்.

பின்னொருகுடியானவன் சொல் வசனம்,

சுவாமி கறுத்ததெல்லாம்தண்ணி - வெளுத்ததெல்லாம் பாலென்றெண்ணியிருக்கிறோம், பூனைவாயெலிபோலத் தவிக்கிறோம், கணக்கர் மணியகாரருடைய இந்திரஜால மகேந்திரஜால மாயாவித்தைகளில் அகப்பட்டிருக்கிறோம் நாளாவர்த்தியில் நான்கணக்கனைக்கேட்டுத் தரிசுபூமி சாகுவளி செய்திருக்க, மற்றொருகுடியானவன் மணியகாரனைக் கட்டிக்கொண்டு தன்பேரால் கணக்கில்தாக்கல்செய்வித்துக்கொண்டிருக்கிறான் இதைக்குறித்து நான்தாசில்தாரரோடு சொல்லிக்கொண்டும் தான் ஏழையாகையால் அவர்காதில் போட்டுக்கொள்ளவில்லை மணியகாரன் தாக்ஷிண்யத்துக்கு உட்பட்டு அவனுக்குடந்தையாயிருக்கிறார்,

சிரஸ்தாதார் தாசில்தாரருக்குச்சொல் வசனம்,

என்ன அய்யா தாசில்தாரரே, சதிசெய்யும்பேருக்குச் சமர்த்தரென்றுபேரோ, தாக்ஷிண்யத்துக்கு உட்பட்டு இப்படிஎல்லாஞ்செய்வதுசரியல்ல, செவ்வையாய்விசாரித்துக் கணக்கில் தாக்கல்செய்வியும், பட்டாபட்வாடாவேளையில் தகரார்வராதபடி ஜாக்கிரதைசெய்யும்பிராதுக்காரர் புற்றிலீசல் பெரும்போக்குப் புறப்பட்டாற்போலப்புறப்படுகிறார்கள் இது நியாயமல்ல,

தாசில்தார் சொல் வசனம்.

நல்லது அந்தப்படி நடந்துகொள்ளுகிறேன்,

பொது வசனம்,

சிரஸ்தாதார் இந்தப்படி எல்லாக்கிராமமும்பைசல்செய்து கணக்கை ஹேட்குமஸ்தா கையில்கொடுக்க, அவர்கணக்கைத் தனிக்கை செய்யும்போது கணக்கைமிரட்டுகிறவிதம்,

ஹெட்குமஸ்தா கணக்கனுக்குச் சொல்வசனம்,

என்னடா கணக்கில் மொத்தசம்மிசெய்திருக்கிறாய் இதுசுத்தப் புரட்டாயிருக்கிறது ஒருகுடியானவனுக்கு வெள்ளவாரிக்காக வஜா செய்வித்திருக்கிறையே இந்தவெள்ளம் எங்கேயிருந்து எங்கேவருகின்றது நக்ஷாஎழுதினை - சரிசை - பைக்கி - புறம்போக்கு - பைக்கி - யில்து சாகுபடிக்குவந்திருக்கிறது அதற்கு நாலாந்தரம்போட்டிருக்கிறாய் அந்தப்பூமிக்கு நாலுபக்கமும்இருக்கிற பூமிகளின் தரமென்ன கணக்கிலை,

கணக்கன் ஹெட்குமஸ்தாவுக்குச்சொல்-வசனம்,

சுவாமி ஏதோவித்தியாசங்கள் இருக்கிறதுதான் தாங்கள்காப்பாற்றவேணும் தங்களுக்குப்பாதபூஜைசெய்ய ஆஜராயிருக்கிறேன்,

பொது-வசனம்.

ஹெட்குமஸ்தாவானவர் பிராக்குபேரிஜில் கம்மிகழித்து ஜாஸ்தி சேர்த்துப் பேரீஜுகைதுசெய்து ஹெட்சிரஸ்தாவிடத்தில் ருஜுவாங்கி மற்றக்குமஸ்தாக்களிடத்தில் - கிட்டா - பந்துபட்டார்க்கள் சித்தப்படுத்தச் சொல்லிக்கொடுக்க அவர்களுங் கணக்கனைமிரட்டி நானுவித இம்சைசெய்து பொடிக்காசுவாங்குகிற விதங்காண்க,

கணக்கனுக்குக் குமஸ்தாசொல் வசனம்,

என்னடா கணக்குத்தாறுமாறாக எழுதியிருக்கிறாய் தொகைகள் விட்டுப்போயும் ஒட்டுத்தொகைதப்பாகவு மிருக்கிறது இதைஹெட்சிரஸ்தாவுக்குத் தெரியப்படுத்துகிறேன்,

கணக்கன் சொல் வசனம்,

சுவாமி சும்மாதொந்தரவுபண்ணாதேயுங்கள் தங்களுக்குஒருமரியாதைசெய்கிறேன்,

பொது வசனம்,

இந்தப்படி மேற்படி குமஸ்தாக்கள் பட்டாசித்தப்படுத்திக் கணக்குகளையும், பட்டாக்களையும், முகாமிலா குமஸ்தாக்களிடத்தில் கொடுக்க அவர்கள் கணக்கனைமிரட்டுகிற விதங்காண்க,

முகாமிலாகுமஸ்தா கணக்கருக்குச்சொல்- வசனம்,

என்னடா நீ எழுதியபட்டா மெத்தக்கிறுக்குவெட்டாயிருக்கிறது நாலுபேர்கள் செவ்வையாய்த்தெரியவில்லை இந்தப்பட்டாஉதவாது கிழித்தெறியவேண்டும் - வேறே செவ்வையாக எழுதிக்கொண்டுவா,

கணக்கன் சொல் வசனம்,

எத்தனைதரம் எழுதுவோம்சுவாமி தங்களுக்கு இயல்ரமாத்திரம்மரியாதை நடப்பிக்கிறோம்;

பேர்று வசனம்,

அந்தக்குமஸ்தா பட்டா முகாபிலாசெய்து அதுகளை டஸ்ஸா அடிக்கிறதற்காக அஜூர் தப்பேதாரன் கையிற்கொடுக்க அவன்தனக்கொன்றும் மரியாதை நடக்கவில்லையென்று அதை ஆலசியப்படுத்துவதுமல்லாமல் தாறுமாறாக டஸ்ஸா அடித்துப்பட்டாவைக் கிழிக்கவும் யத்தினப்படும்போது அவனுக்குக்கணக்கன்சொல்வசனம்,

ஐயா தப்பேதாரரே, இந்தஎழவுபட்டாக்களைஎத்தனைதரம் எழுதுவேன் முத்திரையைத் தாறுமாறாக அடித்துக்கிழிக்கவேண்டாம் உமக்குங்கொஞ்சம் நடப்பிக்கிறோம், இந்தக்கலைக்குவேலை பார்க்கிறதைவிட நாலுவீடு இரந்துசாப்பிடுகிறதே நன்மை,

போது வசனம்,

துரைவந்தசேர்ந்து பட்டா பட்வாடா ஆகும்போது குடிகள் எல்லோரும்வந்து ஆஜராயிருப்பதில்லை ஆதலால் ஜமேதார்கணக்கர் - மணியகாரரைப்பார்த்து மிரட்டுகிறவிதங்காண்க,

ஜமேதார் சொல் வசனம்,

என்ன ஒய் கணக்குப்பிரகாரம் குடிகளெல்லாம் ஆஜரிருக்கிறார்களா, அப்படிக்கில்லாவிட்டால் துரைக்குத் தெரிவிக்கிறேன்,

கணக்கர் சொல் வசனம்,

பத்தெட்டுக்குடிகள்வரவில்லை அவர்களைவரவேணுமென்று எதிர்பார்த்தால் காரியமாகிறதில்லை, உமக்கு மாமூல்பிரகாரம்மரியாதை செய்யச் சித்தமாயிருக்கிறோம் புகார் இல்லாமல் நடப்பித்துவிடும்,

தாசில்தார் - கணக்கர் மணியகாரரை அந்தச்சமயத்தில் கிட்டஅழைப்பித்து உட்காரவைத்துக்கொண்டு சொல்வசனம்.

குடிகளில் யாராவது துரையிடத்தில்பிராது சொல்லிக்கொள்ளாதிருக்கும்படியான முயற்சிசெய்யுங்கள் உங்களுக்குயாராருக்கு என்னென்னகாரிய மாகவேணுமோ அதெல்லாம் ஆகப்பண்ணுவிக்கிறேன் குடிகளைத் துரையிடத்துக்குமாத்திரம்போகாமற்செய்யுங்கள்,

கணக்கன் சொல் வசனம்:

ஆகட்டுஞ்சுவாமி - எங்களால்ஆனமட்டும் குடிகளுக்குச் சமுதாயப்புச் சொல்லுகிறோம் அந்தப்படிசொல்லியும் அவர்கள்கேளா

விட்டால் அப்போதைக்கு எ்தா தாங்கள் அவர்களுக்கு ஒருவிதத்தி சமுதாய்ப்புச் செய்யவேண்டிஇருக்கும்,

தாசில்தார் சொல் வசனம்,

அப்படியே ஆகட்டும்,

பொது வசனம்,

துரையிடத்தில் ருபுருபில்பட்டாபட்வாடா ஆகும்போதுகொள்வார் பேரிஸ்தீவைத்துக்கொண்டிருக்கிறகுமிக்கிகுமஸ்தா அந்தந்தப்பட்டாதாரனை அழையென்று சொல்லும்சமயத்தில் பத்துக்குடிகளுக்கு ஒருவாரஸ் வந்திருப்பானுகையால் அதைக்கண்டிருக்கிற குமஸ்தா-கணக்கரையும்; மணியகாரரையும், மிரட்டுகிறவிதங்காண்க,

என்னடா அந்தந்தப் பட்டாதாரர்களை அழை,

கணக்கர் மணியகாரர் சொல் வசனம்,

சுவாமிகள் காப்பாற்றவேண்டும் தங்களுக்கும் தகுந்தமரியாதைசெய்கிறோம்,

பொது வசனம்,

கிராமங்கள் பைசலாகும்போது நேரிட்டவித்தியாசங்களையெல்லாம் அப்போதைக் கப்போது ஹெட்சிரஸ்தாதார் தாசில்தாருக்குஎடுத்துக்காட்டித் துரைக்குத் தெரியப்படுத்துவதாக மிரட்டிக்கொண்டு வரும்போது இராத்திரிகாலத்தில் சிரஸ்தாதார்இறங்கியிருக்கிற இடத்துக்குப்போய் அவருக்குஒருவிதசமுதாய்ப்புச்சொல்லிக்கொண்டிருந்து மேற்படிசிரஸ்தாதார்பிரயாணப்படும்போதுஇரகசியத்தில் இதற்குமுன்பாகவேபேசியிருக்கிறபிரகாரம் மரியாதை நடத்திவிட்டு ஹெட் குமஸ்தாமுதலாகியபேர்களுக்கு அவர்கள்வந்துஇறங்கியநாள்முதல் வேண்டியசரபராசெய்திருந்தும் அதற்குமேலும் பையை அவிழ்த்துக்கொண்டு அவரவர்களுக்குத்தக்கமரியாதைசெய்து -'ஜமேதார் - தப்பேதார் - டலாயத்து-துரைகள் வீட்டுவேலைக்காரர்கள் முதலாகிய எல்லோருக்கும் இனும்கொடுத்து இந்தப்படிக்கு ஜமாபந்தி பைசலாகிறது,

பிற்பாடு-மணியகாரன்-கணக்கர் ஊருக்குப்போவதற்குச்செலவுபெற்றுக்கொள்ளத் தாசில்தாரிடத்துக்குவருகையில் அவர்களுக்குத்தாசில்தார்சொல் வசனம்,

இவ்வருஷம் ஜமாபந்தியில் விஸ்தாரஞ் செலவாச்சுது- நானும் உங்களுக்குமிகவும் சகாயமாயிருந்து, நீங்கள் எழுதிவைத்த கணக்குப்பிரககாரம் வஜாசெய்வித்து சலிசுபடுத்தியிருக்கிறேன் நீங்கள் மரியாதைபோலே கிராமத்துக்குப்பத்துரூபா வீதமாகிலும்செலவுக்கு ஜாக்கிரதைசெய்வித்துக் கொடுப்பித்தால் பின்னுக்கும் சகாயஞ் செய்வேன்.

மணியக்காரன் கணக்கன் சொல் வசனம்.

அந்தப்படியே பெரியகிராமத்துக்குப்பத்துருபாய் விழுக்காடும், சின்னகிராமத்துக்கு அஞ்சுருபாய்விழுக்காடும், வசூல்செய்து ஜாக்கிரதைசெய்கிறோம். ஆகட்டும்சுவாமி செலவுபெற்றுக்கொள்ளுகிறோம்.

பொது வசனம்.

மழைவிட்டும் தூவானம் விடவில்லையென்பதுபோல், கணக்கர்களைத் தாலூக்குசிரஸ்ததார் ஆஜர்படுத்திக்கொண்டுநீங்கள்இப்போது ஜமாபந்தி பைசலானதற்கு மாமூல்படிக்குக் கணக்குத்தயார் செய்து கொடுத்தாலல்லாமல் ஊருக்குப்போகக் கூடாதென்று கச்சேரியில் இராத்திரியும் பகலும்மடக்கிப்போட்டுவைத்து மிரட்டுகிறவிதங்காண்க.

தாலூக்கு சிரஸ்தா சொல்வசனம்.

நீங்கள் ஜமாபந்தியில் எழுதுவித்தகோஷ்பாரா சாகுபடியே ரீஜுக்கும், முதல் சாகுபடிகணக்குக்கும், சரியாயிருக்கவேணும்- எங்கே உங்களுடைய சாகுபடி கணக்குக்கொண்டுவாருங்கள் தனிக்கைசெய்வோம்-அந்தச்சாகுபடி கணக்குக்கும், இரண்டாம்நம்பர் கோஷ்பாராவுக்கும், சரியாயிருக்கவேணும்- நாலாம்நம்பர் அடங்கல்கணக்குக்கும், அஞ்சாம்நம்பர் சிட்டாவுக்கும், சரிபார்க்கவேணும்-காமேனஷ்மாரி கணக்குக்கும், ஒன்பதாம் நம்பர் மோதர்பாகிட்டாவுக்கும், தாக்கலாபார்க்கவேணும் - ஷை கோஷ்பாராவுக்கும், யக-யச-நம்பர் கோஷ்பாராவுக்கும், சரிபார்க்கவேணும்-ரு- வது நம்பர் சிட்டாப்படிக்கு-யகூ-வது- நம்பர் கவுல்கணக்குச் சரிபார்க்கவேணும்.

இதன்றியில்-கூ-வது-நம்பர் கிஸ்தி வசூல்கணக்கும், ய-வது-நம்பர் ரோஜவார் தண்டல்-யஎ-வது - நம்பர் வசூல்பாக்கி கோஷ்பாரா-யஉ-வது-நம்பர் இருசால்நாமா இதுகளும் இப்போதே தயாராக

வேணும்-மற்றஹாலவால்கணக்கு-ஜலாசன்கணக்கும், மற்றச்சில்லறை தர்ஜேவாரி-பருத்திசாகுப்படி-அமீன்-கரும்பு-சாகுபடி வகைய்ரா கணக்குகளும், இப்போதே தயாராகவேணும்.

கணக்கர் சொல் வசனம்.

ஆனால் இப்போது சமூபந்திவைச்சார்ந்த கணக்குகள் தயார் செய்துகொடுக்கிறோம். சாகுபடிகணக்குக்கும், ஜமாபந்திசாகுபடி கோஷ்பர்ாவுக்கும், கொஞ்சம் ஏகதேசமாயிருக்கும்-தாங்கள் காப்பாற்றவேணும்-காலேஷிமாரிகணக்குக்கும், மோதர்பா பாஜேபாவ்கையராவுக்கும்; எக்தேசம் ஒத்துவரும்-கொஞ்ச நஞ்சம்பேதம் வந்தபோதிலும் முக்கியமாய்த் தாங்களே காப்பாற்றவேணும்-தங்களிட பாதகாணிக்கையும் சமர்ப்பிக்கிறோம்-உத்தரவுதரவேணும் ஊருக்குப்போய்க் கூடுமானசீக்கிரத்தில்வந்து மற்றக்கணக்கும் தயார் செய்வித்துக்கொடுக்கிறோம்.

நல்லதுபோங்கள் சீக்கிரத்தில்வந்துசேருங்கள்.

தொப்பைக்கூத்தாடி கணக்கருக்குச்சொல்வசனம்.

அய்யாகணக்கப்பிள்ளைகளே, நாம்உமேதுவார் நமக்கொன்றுமில்லையா, (கணக்கர்) அப்பா, நீதான் ஒருத்தன்குறைச்சல்நாங்கள் சாட்டியில்லாப் பம்பரம்போலாடுகிறோம். (தொ) கொடுத்துகொடுத்து முழுகுகிறீர்கள் அதில்எனக்குங்கொஞ்சம்கொடுங்கள் தலைமேலோடியவெள்ளம் சாண்ஓடியென்ன முழம் ஓடியென்ன.

பொது - விருத்தம்.

இஷ்டத்தின்படிசனத்தால் எவனும்பொருளும்நித்தம்......... ...*
வெட்டியிற்பெறவேயென்னும் விவேகியாந்தாசில்தாரை........ *
அட்டமச்சனியன்வந்தே அணுகியகொடுமையாலே......... .... *
ஒட்டமேதாவர்தம்மை ஒருமிக்கவரச்செய்வாரோ.............. *

வ ச ன ம்.

இகத்தில் இஷ்டானுபோகமாய் ஜனங்களிடத்தில்வெட்டிவேலைகள்வாங்கவும், அட்டுக்கொடாமல் இலவசத்தில்வண்டியவஸ்துக்களைவாங்கித்தின்னவும், எப்போதும்விருப்பமுற்று அந்தப்படிநடந்துவருகிற தாசில்தாரனை அஷ்டமச்சனி தொடர்ந்தபடியால்சொற்பவிலையுள்ள-கூடை-முறம்- வெட்டிக்குச் செய்வித்துக்கொள்ளவேணுமென்றுநினைத்து ஊரிலிருக்கிற ஒட்டமேதாவனை வரச்செய்கிற விதங்காண்க.

தாசில்தார் சேவகராகிய- கவனப்பன்- ரங்கடு

இவர்கட்குச் சொல் விருத்தம்.

சாதகஞ்செய்யவல்ல கவனப்பாரங்காகேளாய் ... ... .. *
வேதியரொருவர்வீட்டில் மேவுகாரியத்துக்காக ... ... *
வேய்தனைக்கொண்டுகூட விசித்திரமுறங்கள்கட்டும் ... ... *
மேதரவனையிப்போதே விரைவாகஅழைத்துவாரீர். ... .. *

வசனம்.

காதகத்தொழிலில் கைதேர்ந்த ஜவான்களாகிய- கவனப்பா-ரங்கா-இங்கேவாருங்கள் ஒருபிராமணர் வீட்டில் ஒருவிசேஷகாரியம்நடக்கப்போகிறது அதற்காகச் சிலகூடைகள்-முறங்கள்-வேண்டியிருக்கிறது. ஆகையால் இந்த ஊர் மேதரவர் அனைவரையும் அழைத்து வாருங்கள்,

சேவகர் மேதரவரைச் சேர்க்கும்போது

அவர்களை யழைக்கிறவிதம்.

ஒரோயவரா-எல்லாலுகா-ரங்கா-ராமா - கோனிதா-கதிரிகா-வடவனிநாகா-ஒசேஎல்லி-ரங்கி-வீரி-சென்னி - எமக்கா-ர்ரமக்கா-பீமக்கா-ரண்டி சர்க்காருக்கு கம்பசாட்டலு சாயவலெனு ஜல்திகாபயல் தலண்டி.

மேதரவஸ்திகள் சொல்வசனம்.

அய்யாமொகவாண்ளு அடிவிக்கி வெதுருக்குபோயுன்னாருவஸ்தேரம்மண்டாமு.

சேவகர்சொல்வசனம்.

மாதர்சோத்-பயதலுத்நாவா லேதா, குத்தமீததன்னி தீசுகொனிபோதுன்னாமு, அரகத்துசாயகநடவண்டி நடிநடி.

பொது- விருத்தம்.

துஷ்டராமுத்தியோகஸ்தர் துரைகள்பேர்சொல்லிக்கொண்டு...... *
தட்டிகள்பாய்கள்பெட்டி சல்லடைமுறங்கள்கூடை ... ... *
கட்டியேகொடுக்கச்சொல்லிக் கசக்கவேகாசில்லாமல் ... ... *
வெட்டிவேலைகளேசெய்யும் மேதரவர்கள்வந்தாரே ... ... *

வசனம்.

உத்தியோகஸ்தர்களில் துஷ்ட கிருத்தியமுள்ள சிலர் துரைகள் பேர் சொல்லிக்கொண்டு-தட்டிகள்வேணும்-பெட்டிகள்வேணும்-சல்லடைவேணும்-கூடை முறங்கள் வேணுமென்று காசுகொடாமல்

தானேவேலை[illegible]வீட்டுக்கொருவராகவந்து*வெட்டிவேலைசெய்யும் மேதரவர் வருகிறவிதங்காண்க.

மேதரவர்-வருகிறதரு-இராகம்-தன்னியாசி-ரூபகதாளம்.

பல்லவி.

மேதரவர்வந்தார்-எளிய-மேதரவர்வந்தார்.

அநுபல்லவி.

விதமாய்முற்றம் தெற்ற-அதை
விற்றுப்பிழைக்கக் கற்ற (மேதரவர்வந்தார்)

[சரணங்கள்.]

ஏழக்கா காளி காடு வீரி- எல்லி ராமு காடு
ராமக்கா கோனிகாடு சென்னி-ரங்கி குடும்பத்தோடு
மேதரவர்வந்தார்.

கந்தைவஸ்திரம் உடுத்து வெட்டுக்-கத்திகையிலெடுத்து
மொந்தைக்கள்ளைக்குடித்துத் தெரு-முழுதுஞ் சண்டைபிடித்[து]
மேதரவர்வந்தார்.

கட்டிகட்டிப் பிழைக்க ஊர்த்- தாசீல்தாரர்தழைக்க
வெட்டிவேலைக்கழைக்க நாளும்-வீணிலே மிக உழைக்க
மேதரவர்வந்தார்.

சேவகர் தாசில்தாருக்குச் சொல் வசனம்.

தேவரா, மேதரவாண்ளுவச்சி ஆஜரயி உன்னாரு.

தாசில்தார் மேதரவருக்குச் சொல்வசனம்.

எவராமேதரவாண்ளு (சுவாமி) சர்க்கார்பனிகிகானு-நூருசாட்டலு-கம்பலு-தடிகலுகாவலனு-சீக்கிரமுகா தயார்செயவலனு ஒரே எவரா பண்டுரோத்லு ஈ லவுண்டி கொடுகுலுமீத மோசுல் உண்டி செயிஞ்ச வல்சினதி.

மேதரவ ஏமக்காள் தாசீல்தாரருக்குச் சொல்
தெலுங்கு கொச்சகம்.

சாட்டலுன்னுகம்பலுன்னு தடிகலுன்னுகட்டமனி ... ... ...*
நோட்டிமாட்டலுவல்ல நோட்டமுகாசெப்பிதிரி ... ... ... *

---

* [illegible] அக்டோபர்மீ உ அவ உத்தரவினால் சர்க்கார்நேட்டிவ் உத்தியோகஸ்தர் அதிகாரத்தை அக்கிரமமாகச் செலுத்தினர்க்கொன்று ருசுவானால் அவர்களுக்குக்கடினசிட்சை விதிக்கக் கட்டளை.

கூட்டிகிப்புடுலேது கொந்தமட்ர்க்கைஞ்னு .. ... ... ... *
நேட்டிகசேஇவ்வமனி நியமனமுசெயவலனே ... ... ... *

வசனம்.

தேவரா, நோட்டமைன - சாட்டலு-கம்பலு-தடிகலு-சாயமனி உத்தரவுசேஸ்துன்னரு கூட்டிகிலேது நேட்டிசேகொஞ்சம்மூந்தருகலு இப்பிஞ்செடட்டு உத்தரவுசெயவலெனுமாதண்டிரி:

தாசில்தார்சொல் தெலுங்கு விருத்தம்.

கவனருபனிகிகானு கம்பலுசேயமண்டே ... ... *
நவகரிசேயகுண்டா நன்னுகாசடுருதுந்தி ... ... *
அவமரியாதசேசே ஆங்காரிஎமக்கன்னு .. ... ... *
தவடலுமீதகொட்டி தன்னுராஜவானுரங்கா .. ... *

வசனம்.

ஒரேகவனப்பா-ஒரேரங்கடு-ஒரேபுட்டன்ன-கவரன்மெண்டுபனிகிகானு-கம்பலு-சாட்டலு-காவலசி உண்டி நபாபுதினமுலுமுதலுகொனி நடிசே மாமூலு பிரகாரம் வெட்டிகிசேயகா மரியாததப்பி ஆங்காரமுதோ நிர்பயமுகா நன்னு கடுபுகுலேதனி காள அடுகுதுந்தி சூஸ்திரா, ஈலஞ்சமுண்டனு சம்பலவெய் - ஈரண்டெனு தன்னு தன்னு பாகாதன்லண்டி தன்னண்டி.

பொதுவிருத்தம்.

தன்னுராவென்றுதாசில் தாரரோகோபத்தோடு ... ... ... *
சொன்னமாத்திரத்தில்துஷ்ட சேவகரேமக்காளைக் ... ... *
கன்னத்திலடித்தேயெட்டிக் கர்ப்பத்திலுதைத்துத்தள்ளப் ... *
பின்னரப்பேதைதானும் பேச்சற்றுத்தரையில்வீழ்ந்தாள்... ... *

வசனம்.

தாசில்தாரர் மிகுந்தகோபத்தோடு எமக்காளை உதைக்கச்சொல்லிச் சொன்னமாத்திரத்தில் யமகிங்கரர்போல அவரிடத்திலிருக்குஞ் சேவகரில்-ரங்கன்-எமாக்காளைக் கன்னத்திலடிக்கக், கவனப்பன்-அடிவயிற்றில் காலாலுதைக்க, எமக்காள்-பேச்சற்று மூர்ச்சித்துத் தரையில் விழுந்தபோது சேவகர்சொல்லுகிற விதங்காண்க.

சேவகர் சொல்-தரு,

இராகம்-புன்னுகவராளி-அடதாளசாப்பு.

பல்லவி.

மாயப்பாசாங்குதானே-இவளுக்கிது-மாயப்பாசாங்குதானே

அநுபல்லவி.

காயம் பதைப்பற்றுக் கால்கைகள் ஒய்ந்ததும்
பேயின்மகள்தெருவில். பிணம்போலேசாய்ந்ததும்(மாயப்)

[சரணங்கள்.]

ஆவதாகட்டும் அடடா-வயிற்றிலின்னம்
அஞ்சாமல் உதை கொடடா
சாவதன்முன் எடடா-திண்ணையின்மேலே
சத்துப்பண்ணாமல் விடடா
பாவபுண்ணியமொன்றும் பார்க்கவேகூடாது
படுதேவடியாளை அடியடாபாண்சோது (மாயப்)

இவள் துஷ்டப்பறை நாய்டா- இவளுக்கிப்போ
தேனிந்தவீண் வாயடா
சுவரில்முகத்தைத் தேயடா-கொள்ளிகொண்டு
சூடிமயிலைத் தீயடா
பவிஷுகெட்டமுண்டை பயமற்றுப்பேசலாமா
பணம்பணமென்றுசும்மா பலதரங்கேட்கப்போமா (மாயப்)

தலையுந்தொங்கிட்டுப் போச்சு-மூக்கினிலென்ன
சற்றுமில்லையே மூச்சு
அலைவுநமக்குண்ண டாச்சு-இனியிதனுல்
அனைவர்க்கும்வரும் பேச்சு
கொலையிதற்கிலை சாக்ஷி கோர்ட்டுக்குப்போனாலும்
கொடுத்திலஞ்சம்வெற்றி கொள்ளலாமானாலும் (மாயப்)

வாயில்தண்ணீர் விடுங்கள்-சீக்கிரமாக
வயிற்றிலொத்தடங் கொடுங்கள்
சாயலாவென் நிடுங்கள் உண்டோஇல்லையோ
கையில்நாடியைத் தொடுங்கள்
ஆயுளொழிந்தாலதற் காரொன்னசெய்யலாம்
ஆதிஅங்கிராமஸ்தர் அருள்செய்தால்உய்யலாம் (மாயப்)

தொப்பைக்கூத்தாடி சேவகர்க்குச் சொல்வசனம்.

ஐயோ, ஐயோ, திக்கில்லையா, ஏண்டா அந்தக்கிழவியை அடித்து உதைத்துக்கொன்றீர்கள்- இளங்கன்று பயமறியாதென்றும் போலிருக்கிறதே- துள்ளினமாடு பொதிசுமக்கும். (சேவகர்) அமோபாண்

சோத் னக்கென்னடா எச்சிலிலெடுக்கச் சொன்னால் எத்தனை பேர் சாப்பிட்டதென்று கேழ்க்கிறாய். (தெர்) கெடுமதிகண்ணுக்கு த்தோன்றாமல் படுநரகில்விழுகிறீர்கள். நாய்வாலைக்குணக்கெடுக்கக் கூடுமா, உங்கள் குணத்தைத்திருப்ப ஆரால் ஆகும். (சேவகர்) கொ சுகைப்பொருட்டாயெண்ணிக்கருடன் எதிர்பார்ப்பதாயிருக்கிறது அட உனக்குநாங்களுத்தரவுகொடுப்பதீ உனக்கும் அந்தக்கதிநடக் கப்போகுது. (தொ) நல்லதப்பா அப்படி செய்யவேண்டாம்-பா ம்புக்குப் பால்வார்த்தால் விஷத்தைத்தான்கொடுக்கும். அதுபோ லப் புத்திசொல்பவனைக் கொல்லப்பார்க்கிறீர்களீ.

தாசில்தாரக்குச் சேவகர் சொல்வசனம்.

தேவரா, மேதராமுசிலிதானிகி சானுதினுஅகா வாயுரோகமுவ ல்ல உண்டினட்டு உண்டி மாட்டனு வியாக படிபொய்யேதிகத்த அட்லா வுண்டக த்ம்முன அதிகம்பனு சாயடானகுகானு காசடிகி நந்துவல்ல தாமுதன்னேடட்டு உத்தரவு சேசினாரு மேமு ஒகதன் னு தன்னினாமு-அயிதே அதி ஆவாயு உபத்திரமுவல்ல மாட்டனு வி யாக படிவுன்னதி-உத்தரவைத்தேதீசுகொனிபோய்தானிகுடிசலோ பாரவேசி வொஸ்துன்னாமு.

தாசில்தார் சொல் வசனம்.

சரி சரி-மீருசெப்பே ஹேதுனுபாகாவுன்னதி-தப்பிஞ்சுகொ னேதானிகி இதே மஞ்சிமார்க்கமு - அட்லாகே தான்னி தீசுகொனி போய் தானிகுடிசலோபடவேசேடட்டு சாயண்டி-மஞ்சிதண்டி அ ட்லானே சேஸ்துன்னாமு.

பொது விருத்தம்,

உதையுண்டஎமக்காள்தன் உறவினரேங்கஅங்கே ... ... ...*
வதைபடுஞ்செய்திகேட்ட மகனுமெல்லானுசாடு ... ... ...*
உலதியத்தில்வந்துதாயை உளம்பதைபதைக்கப்பார்த்து ... ...*
அதைக்குறித்தமுல்தார்முன்போய் அலறியேஅழுகின்றானே ... *

வசனம்.

தாசில்தாருடைய அக்கிரமநடத்தைகளால் உதைபட்டுவிழு ந்து வதைபட்டிறந்த தன்தாயாகிய-எமக்காளுடைய சங்கதியைமு ங்கிலுக்காகக் காட்டுக்குப்போயிருந்த எல்லானுசாடு என்பவன்கே ட்டவுடனே பறந்தோடிவந்து தாயைப்பார்த்துப் பரதவித்தழுது அவளை ஒருகட்டில்மீதுபோட்டு எடுப்பித்துக்கொண்டுபோய்த் தா சில்தார் முன்பாகவைத்துப் புலம்புகிறவிதங்காண்க.

எல்லாதுகான் தாசில்தார்முன் புலம்புகிற-தரு,

இராகம்-ஆஹிரி-அடதாளசாப்பு.

பல்லவி.

ஏமிசெப்புசுன்னருசாமி-இப்புடு-ஏமிசெப்புசுன்னருசாமி.

அநுபல்லவி.

தாமுகொட்டிஞ்சகா தல்லிதொல்லிபோயா
சீமலோதிக்கு ஏமிலேகனையா(ஏமிசெ)

[சரணங்கள்.]

மேதரவாண்ளந்தரனு பட்டிஞ்சினரு
விதிவாருநவ்வேட்டு திட்டிஞ்சினரு
காதகரங்கனிவிடிசி கட்டிஞ்சினரு
கவனப்பனுபம்பிபாக கொட்டிஞ்சினரு
நீதிஜரீபேமீ ரிடுசாயவச்சுனு
நீந்திகாகபலம் அதிமீகிச்சுனு (ஏமிசெப்)

வெதுருசாட்டகம்ப விசனகராசேசி
வெட்டிக்கிவாடலனு மீருதாரபோசி
கதிக்கேகூட்டிக்கி அடிவிகூரலுகோசி
கடுபுபெஞ்சடமுகெ படுதன்னநுகாசி
அதர்மஸ்துலகேதைவம் அனுகூலமவுதுந்தி
பெதிரோபேதவாண்ளனு ஜ...சிரவுதுந்தி(எமிசெ...

சத்தியமுகாநடவடம் எப்படிக்கிசிதா
தயதாக்ஷிண்ணியமு மனசுக்குண்டராதா
நித்யம்வக்ரிசொம்மு தினடம்பாபமுகாதா
நிர்தமாடலுமீ செவுலாரவினலேதா
சித்தம்சாமிதொர வத்தகிபோத்துன்னும்
தேவடிமுந்துதல்லி மீனிகவேஸ்துன்னும்(ஏமிசெப்)

தாசில்தார் சேவக கவனப்பனுக்குச் சொல்விருத்தம்.

கவனப்பாவாடாஇந்தக் கழுதைஎல்லாதுகானும் ... ... ...*
விவகாரமிகவேசொல்லி வீம்புகள்பேசுகின்றான் ... ... ... *
சுவர்மேலேசார்ந்துகொண்டே தூங்கியேஎன்விழுகிறீர்கள் ... ...*
தவடைமேலடித்தவனேனைத் தள்ளுவீர்வெளியில்தானே ... *

வசனம்.

அடா கவனப்பா, இந்தமேதரவ எல்லாதுகான் வெகுவீம்புக ள்பேசுகிறான் இவனை அடித்து தெட்டி வெளியிலே தள்ளிவிடு இவ

னுக்குக் கெட்டுப்போகக் காலம்வந்தது - இவன் க்ஷேமத்தை அடையவேணுமென்றால் வெளியில் ஒன்றும் புகார்செய்யாமல் ரகசியத்தில் பிணத்தைக் கொண்டுபோய்ப், புதைத்துப்போட்டு ஆராவதிகேட்டால் குமாகண்ட வலியினால் தன்தாய் சடுதியில் விழுந்து இறந்துபோனதாகச்சொல்லி வீட்டில் சும்மாயிருந்துவிடுகிறது யுத்தமாயிருக்கிறது அந்தப்படி புத்திசொல்லிப்போகச்சொல்.

தொப்பைக்கூத்தாடி சபையில்சொல். வசனம்:

ஐயோ, எல்லாலுகானுக்குத் தாசில்தார் ஒரு சமாதானஞ் செய்யவொண்ணாதா ஆயிரங்குணம் ஒருலோபகுணத்தால் தட்டுமென்பது சரியாயிருக்கிறதே மலையிற்று மயிர்க்காலில் நிற்கிறது நல்லமரத்தில் புல்லுருவிபாய்ந்தாற்போலாச்சுது அவ்வளவு கவரவமான அதிகாரஸ்தர் காசுபெருத கூடைக்காக எளியகிழவிபேரில் அமுல் காட்டப்போய்க் கூத்துப்பார்க்கப்போன விடத்தில் பேய்பிடித்ததுபோலவும், பிள்ளையார்பிடிக்கக் குரங்காய்முடிந்தது போலவுமாச்சுது. மேலும் இது தலைசொறியக் கொள்ளி தேடிக் கொண்டாற்போலிருக்கிறது.

பொது- விருத்தம்.

ஏதமிகுதாசில்தார்செத்தமேதரவச்சி ... ... ... *
யீன்றஎல்லாலுகானே ... .. ... ... ... ...*
ஏசிவீணாய்ப்பேசிஓட்டிவிடவேயந்த ... ... ... *
ஏழைமேஜிஸ்திரேட்டாம் ... ... ... ... ...*
இறைவனெனுமுறையிட்டபொழுதில்அமுல்தாரனாயு .. *
மிவர்தமதுசேவகனாயும் ... ... ... ... ...*
எதிர்வரச்செய்தேவிசாரணைவிரித்துகை ... ... ... *
திகளாகஏற்படுத்தி .. ... .. .. ... .. ...*
நீதிபகர்கோர்ட்டுக்கனுப்பக்கமிட்டாகி ... .. ... *
நிபுணராஞ்செஸ்ஸன்கோர்ட்டார் ... ... ... ...*
நிஷ்பக்ஷபாதமாய்ச்சாக்ஷிமுதலானவையும் ... ... *
நேரேவிசாரித்ததின் ... ... ... ... ... ...*
நிச்சயமறிந்திவர்அபிப்பிராயங்களோடு ... ... ... *
நெடியரிக்கார்ட்டுகளையே ... ... ... ... ...*

நெறிமேவுபவுஜதாரிகோர்ட்டுக்கனுப்பவந்... ... *
நியாயாதிபதிகளின்முன் ... ... ... ... ... *
சாதனைகள்பேசியேதாசில்தார்வாதினைச் ... ... *
சாதிக்கஅண்ணன்மகனே ... ... ... ... *
தந்தபிட்டிசனும்சலோமன்வாதித்ததும்... ... ... *
தள்ளிபவுஜதாரிகோர்ட்டார்.. ... ... ... *
தாசில்தாரன்குற்றவாளியெனவோர்ந்துஇரு ... ... ... *
சம்வற்சரம்வரைக்கும்... ... ... ... ... ... *
ஜயவிலிருக்கால்விலங்குடன்மண்ணெடுக்கவே ... *
சாற்றவுந்தாசில்தாரன் .. ... ... ... *
நீதில்நற்குணமொடுநற்செய்கைமேவிடில் ... ... *
தீங்கேதுமில்லையென்றுப் ... ... ... ... ... *
தீயகுணமேவிடத்தீமைகள்அநேகமாய்ச் ... ... *
செய்தல்மதியீனமென்றும் ... ... ... *
தேர்ந்துதெருவீதிகளில்நின்றுகண்ணீர்வரச் ... ... *
சிந்தைநொந்திடவும்ஐயோ .. ... ... ... ... *
தெய்வம்தெய்வமேஎன்னசெய்தாயெனத் .. ... ... *
தேம்பிப்புலம்புவானே ... ... ... ... ... *

வசனம்.

ஏமக்காள்மகன் எல்லாலுகானைத் தாசில்தார் அடித்துத்துரத்தி
விட்ட மாத்திரத்தில் அவன் மாஜிஸ்திரேட்டுக்குப் போய்ப் பிரியா
துசெய்ததின்பேரில் தாசில்தார் வகையராக்களை மாஜிஸ்திரேட்டார்
அழைப்பித்து விசாரிக்கப்பூரா ருசுவாயிருப்பதால் இவர்களைக்கிரி
மினல் கோர்ட்டுக்கனுப்ப, அந்தக்கோர்ட்டார் செஸ்ஸன்கோர்ட்
டுக்குக் கமிட்டுசெய்ததினால் அவர்கள் விசாரித்து இது கொலை
கேசாகையால் தங்கள் அபிப்பிராயத்தோடு பவுஜதாரிகோர்ட்டுக்கு
ரிபர்செய்தபோது ஏமக்காளை அடித்தகாலத்தில் தாசில்தார் சமீப
த்தி லிருந்ததில்லையென்று தாசில்தார்பக்ஷம் பவுஜதாரிகோர்ட்டில்
பிட்டிஷின்கொடுத்துப் பாரிஷ்டரை வைத்துப்பேசியும் அந்தவாதி
க்களைத்தள்ளி ஷெ கோர்ட்டார் தாசில்தாரனுக்கு இரண்டுவருஷங்
காலில்விலங்குடனே மண்ணெடுக்கும்படி சிக்ஷை விதித்ததின்மேல்
நல்லவிவேகம் விளங்கினபடியால் தான்செய்த தீங்குகளை யெல்லா
ம் நினைத்து மண்ணெடுக்கும்போது துக்கித்துத் தெய்வத்தைநோ
க்கித் தாசில்தாரன் புலம்புகிறவிதங்காண்க.

திபதை-ஆகிரி - இராகம்-ஆதிதாளம்.

எத்தனையோபேரிருக்க - இத்தனைபெரிதாகிய
உத்தியோகங்கிடைத்ததே ஐயோ-தெய்வமே-நான்

சத்தியமாக்நடந்து - தாசில்காப்பாற்றுமல்
தத்தித்தலைமோனேன் ஐயோ-தெய்வமே

கொலைசெய்யப்பட்டவனைக் - கொன்றதில்லையென்றவன்
குலைநோயாலிறந்ததாய் ஐயோ-தெய்வமே-மன

யிலைவுண்டாகஅர்ஜி - மாஜிஸ்திரேட்டுக்கெழுதி
வலித்தேன்வெகுபணம் ஐயோ-தெய்வமே

கொள்ளைபோனதாகக் - கூறினால்நானுங்கொஞ்சம்
கொள்ளையடித்துக்கொண்டு ஐயோ-தெய்வமே-நிஜக்

கள்ளனைவிட்டே அந்தக் - களவுக்குடன்படாத
பள்ளனைமாட்டுருத்தேன் ஐயோ-தெய்வமே

காற்றுள்ளபோதுதானே - தூற்றிக்கொள்வோமென்று
தோற்றியபடிநடந்தேன் ஐயோ-தெய்வமே

சாற்றியென்னபயன் - சனியன்கொடுமைக்கு
மாற்றுவேறென்றுண்டோ ஐயோ-தெய்வமே

அதிகாரங்கைக்கொண்டு - அநியாயமேற்கொண்டு
சதிமோசமேசெய்தேன் ஐயோ-தெய்வமே-யாதும்

கதியில்லாமையால்கஸ்தி - கட்டாதகுடிகளை
வதைசெய்பாவமிதுவோ ஐயோ-தெய்வமே

கைக்கூலிவாங்குதல்- களவுத்தொழிலுக்கே
ஒக்குமென்பதறியேனோ ஐயோ-தெய்வமே-முற்றும்

அக்கிரமத்தால்துன்பம்- அனுபவிப்போமென
அதைநினையாமற்போனேன் ஐயோ-தெய்வமே

நன்னடக்கையினாலே- நன்மையுண்டாமென
உன்னவறியேனோ ஐயோ-தெய்வமே-கருங்

கன்னெஞ்சனாகிநான்- கப்டங்களேசெய்து
சின்னமணிந்தேனேன் ஐயோ-தெய்வமே

உத்தியோகம்நிலையல்ல-உள்ளமட்டுங்காசைச்
சுற்றலேசரியென்றேன் ஐயோ-தெய்வமே-ஏனது

சத்திபுத்திகொண்டு-சரியாய்நடந்திடில்
உத்தியோகமுயராதோ ஐயோ-தெய்வமே

நாலுக்குவிலங்காச்சு- கஷ்டவேலையுமாச்சு
கண்டவர்க்கேச்சாச்சே ஐயோ-தெய்வமே

ஜோலிக்கும்போசேனினிச் - சுகுணனும்படிக்கென்னைப்
பாலிக்கலாகாதோ ஐயோ-தெய்வமே

தொப்பைக்கூத்தாடி தாசில்தாரருக்குச்சொல்

வசனம்.

தெண்டம் தெண்டம் சுவாமி-நான் வெகுநாளாகத்தங்களிடத்தில் உமேதாயிருந்து கடைசியில் இலவுகாத்த கிளிபோலானேன்-இதுவரையில் தாங்களென்ன சொன்னாலுஞ் செய்தாலுஞ் சரிசரியென்றுசொல்லிச் சரிப்படுத்தினவர்கள் கள்ளராயிருந்து விளக்கும்பிடித்துக்கொண்டு வந்தார்களே இப்போது ஒருத்தருங் காணோமே. எத்தனைபேர் சந்தைக்குவந்தாலும் எல்லாருந்துணையாவாரோ, தாங்களும் தங்களுடைய அந்தஸ்துக்குத் தக்கபடி நடக்காமல் அற்பகாரியங்களுக்கெல்லாம் உடன்பட்டீர்கள். ஆணையேறித் திட்டிவாசல் நுழையலாமா, நீங்களதிகாரத்தி லிருக்கும்போது எவ்விதவூர் நடத்தை நடந்தாலும் கிட்டவிருந்து சரிசரியென்ற உண்டவீட்டுக்கு ரண்டகஞ் செய்கிறவர்களும், அகத்தி லொன்றும் புறத்திலொன்றுசெய்யுந் துர்க்குணர்களும் எங்கேபோனார்களோ ஏறவிட்டேணியைவாங்குந் துர்த்தர்வார்த்தையை நம்பலாமா காலமும் பலமுந் தெரியாமல் குதிக்கலாமா, தர்மத்துக்குள்ளும் பாவத்துக்குப் புறம்புமா யிருக்கவேணுமே. அதிகாரஞ் செலுத்தும்போது அநியாயஞ் செய்யலாமா, மண்ணிலிருந்து வழக்கோரஞ் சொல்லலாமா; மயிர்பிளந்தல்லவோ விவகாரங்க ளோதவேண்டும்.

தாசில்தார்சொல் வசனம்.

நல்லதப்பா-மிஞ்சிப்போனகாரியத்துக்கென்னசெய்யலாம்.

பொது- விருத்தம்.

நேசஸ்தனுந்தாசில்தார் நேர்ந்தஆபத்தாலேதான் ... ...*
தேறுதலுடையஇஷ்ட தெய்வத்தைநோக்கியேத்திக் ... ...*
கோரியநடவுள்தானே குறைவறக்கிருபைசெய்தற் ...*
கோர்தினவர்த்தமானி.உருக்கொண்டுவருகின்றனே ... ...*

வசனம்.

தாசில்தார் குற்றவாளியர்க்கிக் காலில் விலங்குடன் மண்ணெடுக்கிறகாலத்தில் ஏகத்தியானத்தோடு கடவுளைநோக்கித் துதிசெய்ய, அந்தத்தியாபர மூர்த்தியாகிய கடவுள் இவர்மீது இரக்கங்கூர்ந்து அனுக்கிரகஞ்செய்ய நினைத்து இவருக்கு நல்லவிவேகம் கற்பித்து நல்லவழியில் நடக்கச்செய்து மேன்மையை அடைவிப்பதற்காகத் [தினவர்த்தமானியென்னும்] வடிவுகொண்டு வருகிறவிதங்காண்க.

தினவர்த்தமானி-வருகிற-தரு.

இராகம்-பந்துவராளி- அடதாளசாப்பு.

பல்லவி.

தினவர்த்தமானிவந்தான்-செய்திசொல்லத்தினவர்த்தமானிவந்தான்

அநுபல்லவி.

கண்பெற்றிடுங்கவர்னர் ... காக்குங்கருத்துக்கொண்டு
தினந்தன்னைஅபிவிர்த்தி ... ... செய்வதெல்லாங்கண்டு

[சரணங்கள்.]

பதினாலங்குலநீள .. ... ... ஆளாய்-ஒரு
பத்தங்குலஅகலத் ... ... ... தாளாய்
அதிபர்தமக்குவலத் ... ... தோளாய்ப்-பாவம்
அதனையறுக்கும்வச்ர ... வாளாய்ச்
சதிராய்ச்சகலதேச... ... சங்கதியெல்லாங்கூறிப்
பதராகியசிலர்செய் பாவச்செய்கையைத்தூறித் (தின)

அய்யர்பேர்சிவேல்கருத்தில் ... .. பிறந்து-லார்
டாரிஸென்பவர்கையில்... ... .. வளர்ந்து
கையொப்பக்காரர்களாற் ... ...சிறந்து-இந்தக்
காசினியிடமெல்லாம் ..... .. பறந்து
கருணைகொண்டனைவர்க்கும்-கல்விவிளங்கச்செய்து
தருணமறிந்துமிகு ...சன்மார்க்கமழைபெய்து (தின)

பொங்குமிவன்பக்கம்... ... ...எட்டும்-இந்தப்
பூகோளக்கோள ... ... ... மட்டும்
எங்கும்நடந்தசெய்தி .. ... ஒட்டும்-கண்ணுக்
கெதிரேநடந்ததுபோல் ... . கிட்டும்

எண்ணரியபெருமை ... ... எப்போதும்பெற்று
தன்னுழ்க்ஷேமமேகோரி... ... நடுவுநிலைமையற்றுத்(தின)

இத்தேசத்தாருக்குத்தினவர்த்தமானி சொல்லுஞ்சமாசாரம்.

மதிராசுகவர்னர்-மகா-ஈ-ஈ-ரஹிட்டான் ரோபில்லார்டு
ஹாரீஸ் துரைத்தனச் சிந்து.

இராகம்-நாதநாமக்கிரியை- அடதாளசாப்பு.

பல்லவி.

துரைத்தனங்கேளீர் - லார்டாரீசு-துரைத்தனங்கேளீர்

அநுபல்லவி.

பெருத்தபுவியில்ஜோதி... .. இரத்தினமணிமகுடம்
தரித்தவிக்டோரியா . ..... திருத்தமுடன்அரசு
விருத்திசெயுமின்றுடல் .. .. ...தரித்திரமிகுகுடிகள்
வருத்தமதனைநீக்கக்... கருத்துக்கொள்பிரபுமகன் (துரை)

[சரணங்கள்.]

மருவியகிரான்டு ... ... .. கம்மான்டர்இன்சீப்
மனமகிழ்ஆனரோபில் ... ... வாட்டர்எல்லியாட்
மனுநீதர் ... ஹென்றி ... ... மங்கமரிமகிபன்
புண் ... ர்கனௌப் ... பூதல்மேத்துநற்

புகழது ஓங்கக் ... ... குடிகட்கு
மிகுதுயர்நீங்க ... ... உதவிகள்

தேடிச்செய்பைகிராப்ட்டு ... சீப்செக்ரட்டேரிதன
ஜோடி-போர்டுவியன் ... செக்கிரிட்டேரியென
நாடி-சி-யே-புரோன் ... ... நண்பன்மிலட்டேரி
நீடுஞ்செக்கிரிட்டேரி... ... ...நிபுணருடனியற்றும் (துரை)

சத்தியநீதிபகர்... ... ... சதர்நியாயாதிபதிகள்
உத்தமராமஹூபர் ... உல்லியம்மோரஹேட்
வித்தியநீதஸ்திரஞ்சு ... ... ... வித்தியாவிவகார
உத்தியலவுஞ்சொல்ல ... ஒழுங்கேற்பாடியற்றி

உல்கெங்குந் துதிக்க ... நாலுகல்டத்
தலவேந்தர் மதிக்கத்... தகைமைபெறு

புகழ்சேரினியு ... போர்ட்டுமெம்பர்கள்மிகு
மகிழ்சேரிருவராம் ... ... மால்ட்பிமதிவல்லோர்

திகழுந்தமிழ்க்கல்வித் - திறத்தோன் ஹெனரிபெயலி
இகழறஇவருடன்......இசைந்துவிர்த்திகள்செய்யும் (துரை)

இந்தத்தேசத்துக்கு... ..... இறைவர்கப்மினியார்க்கு
நிந்தையுதரிவி ... ... ... ... நியுஜூபிசர்கள்
நேர்ந்துகுடிகளை ... .. நோசஇமிசைசெய்து
தொந்தரையால்கிஸ்தித்-தொகைகள்வசூல்பண்ணும்

துன்பங்களுணர்ந்து... .. உள்ளமதில்
அன்புமே சுரந்து ... .. மேஜயர்லீ

சீமோரும்பிளாக்கெட்டும் . சிறந்தபார்லிமெண்டில்
சாமர்த்தியமொடுபேசிச... .. .. சாதித்தசங்கதி
ஆமோஅல்லவோவென் ... ... றறியக்கமிசனைத்
தாமேறியமஞ்செய்து... ...சத்தியங்கண்டறிந்ததல் (துரை)

நீதிஇந்தியாவில் ... ... நிலைபெறச்செய்தற்குப்
பேதைக்குடிகள்கட்டும்... ...பெரியதீர்வைகளிற்
பாதிகாலுந்தள்ளிப் ... ... பலவந்தஇமிசைகள் *
வாதைகளைநீக்கி ... ... ... வகைமிகவேதேடி

மனிதர்பிழைக்கக்- கம்பெனியென்னும்
புனிதர் தழைக்க ... ... விந்தை தாளாய்

மின்னல்தபால்கல்வி ... ... வித்தியாசாலைகளும்
பன்னருப்விநோத * பண்டசாலைகளும்
இன்னலறும்நல்ல... ... இருப்புப்பாதைகளும்
உன்னும்வேளாண்மைக் ... குரியமுயற்சிசெய்யும் (துரை)

---

* ௲௮௱௫௰௫ ஜனவரி௴ ௨௰௨ ரிவினியுபோர்ட்டு சர்க்கியுலர் உத்திரவினால் கிஸ்திவசூலுக்காகக் குடிகளை வருத்தப்படுத்தக்கூடாது பணஞ்சேராவிட்டால் சட்டப்படிக்கு நடத்தவேண்டுமெனக்கட்டளை.

௲௮௱௫௰௫ அக்டோபர்௴ ௨௰௨ உத்தரவினால் சொந்தச்செலவில் வெட்டுங்கிணற்றுக்கு அதிகதீர்வையில்லை.

---

* ௲௮௱௬௰௫ மார்ச்சி௴ ௨௰௨ உத்தரவினால் ஆடுமாடு முதலிய கால்நடைகள் தானியங்கள் குடித்தன ஏனங்கள் துணிவகைகள் நீலம் பருத்தி கரும்புமுதலிய தினுசுகள் உண்டாக்கிக் குடித்தனட்ரீலக்ஷிச் சங்கத்தார்முன்பாக கொண்டுவந்து காண்பித்தால் சிரேஷ்டமானவைகளுக்கு நல்ல இனாம்கொடுக்கப்படுமென்றுகட்டளை.

ஏரிகள்குளங்கள் ... ... எங்கெங்கும்பாதைகள்
வாரிவருங்கால் ... ... வாய்பலபாலங்கள்
பாரநதிகளில் ... ... ... பல்புகைப்படவுகள்
சேரும்வழிப்போக் ... ...கருக்குச்சத்திரங்கள்

இறக்கவேமுடித்து .. வியாதியெல்லாம்
பறக்கவேயடித்துத் ... தேட்டமிகு

அரியதருமஆஸ் ... ... ... பத்திரிகள்வைத்து
உரியமருந்தளித்து ... ... உதவிகள்செய்துவரும்
பெரியஅம்மையென்னும்... பேரில்லாமல்செய்யத்
தெரியவாக்சநேஷன் ... தேசத்திலமைத்திடும் (துரை)

சிரத்தையோடிந்தச் ... ... சீமையிலேகல்வி
விருத்தியடையவறிந்து ... ... இங்கிலீசுலாவும்
அரித்தமெட்டிக்கல் ... ... ... ஜீப்ராயூக்லிட்
திருத்துங்கிராமரிங்கி ... லாண்டுஇந்தியாவின்

சரித்திரங்களும் ... ... ஜியாகிராபி
விரித்தநூல்களும் ... தேசபாஷை.

படித்துத்தேர்ந்திங்கிலீச ... பாஷையிலும்பரீக்ஷை
கொடுத்துநல்லகுட்டு ... காரகட்டரும்பெற்று
அடுத்துவருபவர்க் ... காகுமுத்தியோகமென்று
விடுத்தநோடிபிகேஷின் ... விமரிசைபுரிகின்ற (துரை)

மதிதவழ்மாடங்கள் ... வளர்சென்னைதனிலொளிர்
ரதகஜதுரகஞ்சூழ் ... ...ரயிட்டான்ரோபில்மகா
அதிபிருதுஎலார்ட் .. ... ...ட்டரீசெறுநாமம்
துதிசெயவுலகத்தில் ... துய்யகீர்த்தியுள

தோன்றலென்னவும் ... நியமமுள்ள
சான்றோர்பன்னவும்- பெற்றுநல்லோர்

சுளிக்கத்தக்கபொல்லா ... துஷ்டர்தஞ்செய்கைகள்
ஒளிக்கஇடமில்லாமல் .. ... உலகமெலாமறிய
விளக்குஞ்சைதைக்காசி .. ... விஸ்வநாதகவிஞன்
களிக்கக்கனமேசெய்யுங் ... ...கர்னல்கவர்னர்துரை (துரை)

## தொப்பைக்கூத்தாடி நீதிசாகரம் தினவர்த்தமானியைக்கண்டு தரிசித்துச்சொல் வசனம்.

சுவாமிதண்டம் (தின) நீ ஆரப்பா - உன்பேரென்ன (தொ) தங்கள்பேர் தின்வர்த்தமானி- என்பேர் நிமிஷவர்த்தமானி(தின) அப்படியா வெகுசந்தோஷம் உன்சங்கதியென்ன இப்போது வந்த காரியமென்ன (தொ) தங்களிடத்தில் அரக்கரா உத்தியோகத்திலாவது- செய்திசொல்லி யுத்தியோகத்திலாவது- இருக்கலாமென்றுவந்தேன் (தின) ஆகட்டும் ஊரிலென்னசெய்தி (தொ) இந்தத்தாலூகாவில் தாஷ்டிகபந்துலென்னும் ஒருவர் தாசிலி லிருந்து தத்திததுமாறி உத்தியோகம்போய் இப்போது தங்களைவந்து காணவேணுமென்று பிரயத்தினப்பட்டிருக்கிறார். (தின) அவருக்கெதனால் உத்தியோகம் போச்சுதப்பா, (தொ) உத்தியோகம் போனதுமாத்திரமல்ல காலுக்குவிலங்குமாச்சுது. (தின) எனப்படி(தொ)உத்தியோகமிருக்கும்போது வாங்கினலஞ்சம் கொஞ்சமல்ல, பொழுதுவிடியுமுன் தலாரிகளும் ஒத்தாசைக்காரரும் வீட்டுவாசலில் காத்திருப்பார்கள் புழைக்கடையிலுந் தலைக்கடையிலும், குதிரைக்கொட்டாயிலும், மாட்டுக்கொட்டாயிலும், இராத்திரி பனிரெண்டு மணிநேரமானாலும் ஓய்வில்லாமல் படுக்கைக்குப்போகிற பரியந்தம் ரகசியப்பேச்சுகள் நடக்கிறது மற்றப்பேர்க்குக்காணச்சாவகாசங்கிடையாது எப்போதுந் தந்திரங்கள் தேடுகிறதில் தான்புத்தியைச்செலுத்தியிருக்கிறது அவருக்கு எழுதப்பட்ட அர்ஜிகளில் ஆயிரம்புனைசுருட்டுகளிருக்கும்- மலையை அணுவாக்குவார். அணுவைமலையாக்குவார். அநேக உபாயதந்திரமறிவார் அவர் காலால்போட்ட முடிச்சை- யார்க்குங் கையாலவிழ்ப்பது அசாத்தியம். (தின) அவரிந்தப்படி சம்பாதித்திருந்தால் வெகு ஆஸ்திஇருக்கவேண்டுமே (தொ) சம்பாதிப்பதில் பாதிவெளிச்செலவுக்குப் போகிறது அதாவது- இவர்செய்யப்பட்ட மாறுபாடுகளெல்லாம் அருகிலிருக்கிறவர்கள் அப்போதுக்கப்போது தெரிந்துகொண்டு மிரட்டும் சமயத்திலெல்லாம்- நூறு- சமர்ப்பித்துக்கொண்டு வரவேணும். இரண்டவன்கண்ணுக்கு மிரண்டதெல்லாம் பேயென்பதுபோல் அதவாவழியே தாக்கீது கொண்டுபோகிற டலாயத்து மிரட்டினாலும் சமர்ப்பிக்கவேண்டும் ஜமாபந்தியில் செலவுஐந்நூறுக்குக் குறையாது. இதல்

லாமல் கோர்ட்டுகளி லிருக்கிற கிரிமினல் ஜபாவினிவிசு முதலாகிய
பேர்களுக்கும் ஊரில்பொதி பத்துரூபாய்க்கு விற்றால் மூன்றுரூபா
ய்க்கு-நெல்லு-கொள்ளு- வாங்கி அனுப்பவேணும் கலியாணம்வந்
தால் ரூபாய்க்கு ஒருகுடம் விளக்கெண்ணெய் நெய்வாங்கியனுப்பவேணு
ம்-பண்டியில் காய்கறிகள்வாங்கி யனுப்பவேணும்- இந்தச்செலவெ
ல்லாமிருக்கிறது. (தின) இதுகளெல்லாந் துரைகளுடைய கேழ்வி
க்கு வருகிறதில்லையா, (தொ) லஞ்சம்வாங்காத தாசில்தார் எதாவ
து பிசகிப்போனால் உடனே துரைகளுடைய கேழ்விக்குவருமே
யொழியப் புரட்டிலே சம்பாதித்துத் தானுந்தின்று சிரஸ்தாமுதல்
ஜாடுமாலிவரைக்குங்கொடுத்து அவர்களைக் கட்டிக்கொண்டிருக்கிற
தாசில்தார்பேச்சு ஒருபோதும் வெளியில்வராது. வந்தாலுஞ்சொ
ன்னவன்பேயனாவான் அல்லது பொய்யனாவான். அப்படியிருக்க
ப்பலநாளையதிருடன் ஒருநாளைக் ககப்படுவானென்பதற்குச்சரியா
ய் இவர்கடைசியில் அகப்பட்டுக்கொண்டார். ஆனைதன்பலம் அறி
யாதுபோல இவர்பலம் இவரறியார். சந்திரனும் சூரியனும், பா
ம்பால் நடுங்குகிறார்களேயொழிய இவர் ஆருக்கும் பயப்பட்டவர
ல்ல, கடைசியில் மதிமோசத்தினாலோ, விதிமோசத்தினாலோ, எளி
யவனை யெதிரிட்டுக்கொண்டார். அதுவேஹானியாச்சுது பித்
துப்பிடித்ததுபோலப் பிடித்ததையேபிடித்தார். விருதுகூடிச்செ
டியில் நுழைந்தார். மனதாரச்செய்த பாவம்போமா, வளர்த்தக
டாவையிற் பாய்ந்ததுபோலவும், உடுத்தபுடவைதானே பாம்பாய்
க்கடித்ததுபோலவும், தாறுவந்து தாய்வாழையைக் கெடுத்ததுபோ
லவும், கீழஇருந்த உத்தியோகஸ்தரோ வேர்ப்பூச்சியா யிருந்தார்கள்.
உண்கிறசோற்றில் நஞ்சுகலந்தாற்போலாச்சுது ஐயோ, இப்போது
அந்தரத்தில் கோலெறிந்த அந்தகனைப்போலாகி யிருக்கிறார். மலை
போல விசாரந்தின்னப் பனிக்கால தாமரைபோல் முகம்வாடி எரி
யில்விழுந்த வெண்ணெய்போலுருகி அலைவாய்த் துரும்புபோலவு
ம், பாய்மரமில்லா மரக்கலம்போலவும், தத்தளிக்கிறார். கொதிக்
கிறசொட்பனையில் விழுந்த புழுப்போலவும் துடிக்கிறார் இப்பொ
ழுது சீவனம்போனாலும் மானம்போகலாமா, அங்கத்தைக்கொண்
டுபோய் ஆற்றிலல்லவோ அலசவேணும் நாணிக்கொள்ளச் சாண்க
யிறுபஞ்சமா வாழ்நாளையும் வைத்திருக்கவேணுமா என்கிறார். இந்
தச்சமயத்தில் தாங்கள் கும்பிடப்போனதெய்வம் குறுக்காகவந்த

துபோலவும், தேடப்போனமருந்துகாலில்கப்பட்டது போலவும், சர்க்கரைப்பந்தலில் தேன்மாரிபொழிந்ததுபோலவும், வந்தீர்கள்தங்களுடைய தரிசனங்கிடைத்ததுமல்லாமல் இந்தத்தேசத்தில் இதுவரையில் கேழ்விப்படாத அநேக அதிசயமான விர்த்தியின் விவரமுந் தெரியவந்தது. தங்களுடைய முகதரிசனங்கண்டாலும் பூவம்போம் நல்லகாலம் பிறந்தது தாங்கள்சொல்லியவிதமாக எங்கள் தேகஸ்தரைக்கல்வியிலும், மேன்மையிலும், சம்பத்திலும், கவரன்மெண்டார் விர்த்திசெய்விக்கிற இத்தருணத்தில் வெண்ணெயைத்திரண்டுவரச்சே தாழியுடைத்தவன்போல் வடதேசத்துராஜ துரோகிகளாகிய நரகப்பிசாசுகள் கலகத்துக்கேர்ப்பட்டுக் கெடுத்தார்கள். சதிசெய்யும்பேருக்கும் சமர்த்தனொன்றுபேரோ, தருமஞ் சேருமிடத்திலேயே செயமுஞ்சேரும் - பிரிட்டிஸ் துரைத்தனத்தார் எப்போதுஞ் சத்தியவான்களென்றுபேரெடுத்தார்கள். அவர்களுக் கொருபோதுந் தாழ்ச்சிவருவதுண்டோ நமக்குங்குறைவுவருவதுண்டோ, நல்லது சிறியோர்செய்தபிழையைப் பெரியோர் பொறுப்பதுகடனாதலால் தாசீல்தார் பிழையைப்பொறுத்துத் தாங்கள் கடாக்ஷம் வைத்து அவருக்கு அனுக்கிரகஞ் செய்யவேண்டும் (தின) அப்பா, உனக்கு நிமிஷிவர்த்தமானி யென்கிறபெயரும் தொப்பைக்கூத்தாடி நீதிசாகர மென்கிறபெயரும்தகும் நீ நன்றாய் வாழக்கடவாய்.

தினவர்த்தமானிக்குத் தாசில்தார்சொல்

போற்றி விருத்தம்.

கனமிகுலார்ட்டாம்ஆரீஸ் கவனர்தமுதவியாலே ... ... *
மனமகிழ்வடிவுகொண்டு வந்துநல்விஷயம்பேசித் ... ... *
தனதுறஇத்தேயத்து ஜனங்களுக்குதவிசெய்யும் ... ... *
தின்வர்த்தமானியேயுன் திருவடிபோற்றிபோற்றி. ... ... *

வசனம்.

மகாகனம்பொருந்திய மகாராஜராஜஸ்ரீ-லார்ட்டு ஆரீசு அவர்களுடைய உதவிபெற்று இந்தியாதேசத்து விர்த்தியைக்குறித்த-எதுக்கள் யாவற்றையும் எடுத்துரைப்பேசி நன்மையுண்டாக்கி உதவிசெய்கின்ற பெருமைபெற்ற தினவர்த்தமானியே உம்மைப் போற்றி செய்கிறேன்.

தினவர்த்தமானி- தாசில்தாரனை வாழ்த்துகிற

விருத்தம்.

நாட்டிலேகொலைகளாதி நடத்தியபடியால்நீதிக் ... ... ... *
கோர்ட்டிலே துரைமாரானோர் கொடியனென்றுணர்ந்துகாலில் *
மாட்டியவிலங்கொலிக்க மண்ணெடுத்தழுதுநிற்கும் ... ... *
தாஷ்டிகபந்துலேநீ தரணியில்வாழிவாழி .. ... ... ... ...*

வசனம்.

உலகத்தில் துரைத்தனத்தாருடைய உத்தியோகத்திலிருந்து கொண்டு கொலைமுதலாகிய அநேகம் பொல்லாங்குகளைப் புரிந்ததினால் நியாயாதிபதிகளால் காலில்விலங்குடன் மண்ணெடுக்கும்படி சிக்ஷையடைந்தபின்பு நல்லறிவுவந்து நம்மை நோக்கித் துதிசெய்யுந் தாசில்தாரனே நீ இந்தப்பூமியில் வாழக்கடவாய்.

தினவர்த்தமானியைப்பார்த்துத் தாசில்தார்சொல்

நிலமண்டில - ஆசிரியப்பா.

இராகம் - ஆபி.

திருமலிசிந்து தேசஞ்செழிக்க ... ... ... *
வருதினவர்த்தமானியேயென்று ... ... ...*
சரித்திரம்மனைத்துஞ் சவிஸ்தாரமாக ... ... ...*
விரித்துச்சொல்வேன் மேதினியறிய ... ... *
ஐந்தாறுவயதி லானமட்டும் ... ... *
இந்துலிபிபடிக்க எழுதவறிந்தேன் ... ... *
கணக்குச்சிறிது கற்றுத்தமிழில் ... ... ...*
வணக்கமாயர்ஜி வகைகளுமெழுதத் ... ... *
தெரிந்தமாத்திரஞ் சிலநாள்வேலையில் ... ...*
திருந்தவெய்தச் சிரஸ்தாகச்சேரியில் ... ... *
உத்தியோகத்துக்கு மேதுசெய்து ... ... *
சத்தியானுசாரஞ் சமர்ப்பித்தேதான் ... ...*
அங்காமியென்னு மனுவவெய்திச் ... ... *
சுங்கச்சாவடியில் தொகைகளைச்சேர்த்துக் .. *
கொடுத்ததன்பின் அநூர்க்குமஸ்தாவாகி ... *
அடுத்துப்பேஷ்கா ராகிமற்றும்... ... ... *

துரைமார்பட்ளர் சொலுமாடுகோழி * ... *
சரபராசெய்தவர் தயவுபெற்றுச் ... ... *
பொரிசினாலே சீக்கிரந்தாசில் ... ... ... *
உபாயமிகுத்த உத்தியோகமானேன் ... ... *
திட்டம்பைசல் செய்ஜமாபந்தியில்... ... *
பட்டயத்தகரார் பங்குத்தகரார் ... ... ... *
பயிர்களின்தகரார் பணையெல்லைத்தகரார்... .. *
வயில்பூமித்தகரார் வாய்க்கால்தகரார் .. ... *
வெள்ளவாரி மினாசெய்வித்தல் ... ... *
கொள்ளைதிருட்டுக் கொலைமோதர்ப்பா ... ... *
சாயரப்காரி தரங்கம்மிஜாஸ்தி... ... ... *
பாய்தண்ணீர்த்தகரார் பைசல்விசுபடி ... ... *
ஏரிமராமத் திவைமுதலானதில் .. ... ... *
ஜாரியாய்ச்சர்க்கார் தன்னைப்புரட்டி ... ... *
வாரிசேன்பணத்தை மாறுபாடுகளிலும் ... *
கோரியபடியெலாங் கொள்ளையடித்தேன் ... *
அகாலமரணத்தி லனந்தந்தேடினேன் ... ... *
சகாயமோயார்க்குஞ் சற்றுஞ்செய்திலேன் ... *
கோவில்சொத்தைக் கூசாமற்றின்றேன் ... ... *
பாவபுண்ணியம் பார்த்தவனல்லேன் ... ... *
துட்டுத்தராமலே சொந்தவேலைகளை ... ... *
வெட்டிக்கேசெய் வித்துவந்ததுமலால் .. ... *
தீதுபுரிவதில் சிரேஷ்டனாகி ... ... ... *
மேதரவச்சியை வீணாகத்தான்... ... ... ... *
கூடைகட்டென்று கொடுங்கொலைசெய்து ... *
தேடியபாவத் தீயனானேன் .. ... ... ... *
ஆகிலுமெனக்கின் கன்புகூர்ந்து ... ... ... *
பேர்கபாக்கியம் பொருந்தும்படிவரம் ... *

---

* ௲அ௱௫௰ மே ௴ ௯ உ உத்தரவினால் சர்க்கார் நிர்ப்பந்தமில்லாமல் ஜனங்கள் சுதாவில்தானே ஆடு மாடுமுதலியவற்றைத் துரைமார்முதலான பேர்களுக்கு நியாயமாய்ச் சரபராபண்ணலாம் இதுகாரியத்தில் சர்க்கார் உத்தியோகஸ்தர் தடைபண்ணக்கூடாதென்றுகட்டளை.

அளித்துநல்ருய் அனுக்கிரகஞ்செய்து ... *
களித்திட வேண்டுநற் கருணையங்கடலே ... ...*

தினவர்த்தமானி-தாசில்தாரனுக்குப் புத்திசொல்லுகின்ற

தரு-இராகம்-புன்னாகவராளி,

தாளம்-ரூபகம்.

வருந்துர்தாசில்தாரனே நீ ... மகிழ்ப்பெறவேயடைவாய்
மனுநீதிமுதலாம்சன் ... ... மார்க்கத்திலேநடவாய்
தெரிந்தபெரியோர்களை நீ ... ... சேர்ந்துமருவிடுவாய்
பரிந்துனதுதீயகுணப்.,, ... .. பற்றைமாற்றிவிடுவாய்

வருந்துர்

இட்டத்துக்குப்போகும்போது .. ...தேவடியாள்வேண்டாம்
சிலகாரியமமைத்திடவே .. ...சேருத்தலாலிவேண்டாம்
இஷ்டமுள்ளமைத்துனரும் ... இளையவரும்வேண்டாம்
இசைவல்லோரும்யாசகரும் ... ஏவலரும்வேண்டாம்

வருந்துர்

படிச்செலவுக்கென்றுநிதம் ... ... பத்தைந்துவாங்காதே.
பதைக்கப்பதைக்கக்குடிகளது .. பணங்களைக்கோங்காதே
அடுத்தகணக்குர்சொலுமிருந்த......அக்கிரமத்தைத்தாங்காதே
அநியாயமிதென்றறிந்தும் .. .. அதைச்செயவோங்காதே

வருந்துர்

தரம்புரட்டுசேபாவணி .. ... ... ... என்றுமிரட்டாதே
தகரார்தகரீரிலைகளிற்செய்யுந்... தனிக்கையிற்புரட்டாதே
எருமைவரிஎருதுவரி .. ... ... ... என்னவுருட்டாதே
எளியவர்க்குநக்குநிர்த்தி ... .. ஏற்படுத்தவொட்டாதே

வருந்துர்

அளவுசாஸ்திரியென்றுசொல்லி ... அநியாயம்பண்ணாதே
ஆனைவெட்டிக்கென்றுபார்க்கும்-அவதிசெயவொண்ணாதே
களவுமுதலானவையில் ... ... ... காசுவாங்கியுண்ணாதே
கலியாணமென்றுபணம் .... ... கழற்றவுமெண்ணாதே

வருந்துர்

டிரட்டுஅர்ஜியெழுதியேபோல்... ... லாங்குகள்செய்யாதே
.புன்செய்நன்செய்நன்செய்புன்செய்-ஆக்கிப்பணங்கொய்யாதே

சிரஸ்ததாரர்புரட்டுக்கிசைய ... இலபொன்கையிற்பெய்யாதே
தேவஸ்தானசொத்துகளைத் ... தின்னமனம்வையாதே

வருந்துந்

இவ்விததுர்நடத்தைகளை ... ... எப்போதும்விடுவாய்
இகபரத்தினின்பமுற ... ... ... ஈசனைப்போற்றிடுவாய்
செவ்விதருங்கல்விதன்னில் ... ... ... திறமிகவுமடைவாய்
சிரஞ்சீவியாகப்பெருஞ் ... ... செல்வமும்பெறக்கடவாய்

வருந்துந்

பொது விருத்தம்.

தினவர்த்தமானிசொன்ன திறமெலாமுணர்ந்துநேர்ந்து ... ... *
மனமகிழ்ந்தாசில்தாரர் வசையுறுகாவல்நீங்கிக் ... ... ... *
கனமுறுமலுவலெய்திக் காசினியோர்மதிக்கத் .. ... ... ... *
தானதான்யசம்பத்தோடு தரணியில்வாழ்கின்றாரோ ... ... *

வாழி—விருத்தம்.

இரத்னமுடிபெற்றவிக்டோரியாவாழி ... ... ... ... *
இசைமிகும்பார்லிமென்டிறைவர்களும்வாழி ... *
கருத்தினுயரான்றேயில்கம்பனியார்வாழி ... ... ... *
கவர்னர்ஜெனரல்லார்ட்டுகானிங்கும்வாழி ... ... *
அருத்தியோடாளும்லார்ட்டாரீசும்வாழி ... ... ... *
ஆனசதர்போர்ட்டதிகாரிகளும்வாழி ... ... ... *
பொருத்தமுறுகுடிகளும்புலவர்களும்வாழி ... ... *
புகழும்நற்றாசில்தார்புவிமீதுவாழி ... ... ... *

---

# தாசில்தார் நாடகம்.

முற்றுப்பெற்றது.

---

இஃது
சிந்தாதிரிப்பேட்டை,
அண்ணாமலை முதலியாரால்
அச்சடுக்கப்பட்டது.